வொட்டாம லதையழித்துப் பொன்னாக்கின திருஷ்டாந்த நிலையு னக்குத்தாஷ்டாந்த நிலையாகையால்,— பேதவாத போதுதல்பி ழையே - பசுமுதல்கெடாது பெறுவானும் பேருமாயிருக்குமென் று நீ முன்னேசொன்ன பேதவாதமும் பழுதாம்,—இன்னு மின் னுயிரேமங் குளிகைதன்னி லந்நியந்தருவது திடமே - இதுவல் லாமல்செம்பானது தன்னைச்சுத்தமாக்கின குளிகையுமாகாமற்ற ன்னுடைய தன்மையுங்கெட்டு நடுவேபொன்னான தன்மைபோ ல இந்தவான்மாவுந் தன்னைச்சுத்தமாக்கின சிவனுடைய சொரூ பமுமாகாமற் றன்னுடைய தன்மையுங்கெட்டு வேறொருசொரூ பமாகவேண்டு மாகையாற் குற்றமுண் டென்கிறது தப்பாது,— வீடித்திறனிற்கூடக் கூடா - மோக்ஷம் செம்புமிரத குளிகையு ம்போலுமென்று சொன்ன வகையிற் கூடுமென்கிற துண்டா காது. (௮)

பேதவாதி சங்கற்பநிராகரண-முற்றிற்று.

## சிவசமவாதி சங்கற்பம்

பாசமும்பசுவு மீசனுமென்றிம்
மூவகையுணர்வு தான்முதன்மையவாய்ப்
பாசவைம்புலன் றேசுறவுணர்த்தப்
பசுத்தனிஞானம் புசித்திடுமென்றே
யினையஞானம் பிரிவுறவெரியாச்
செந்தழறருநெறி யந்தமிலுயிரு
மறிவாயொன்று மறியாதன்றே
யிவ்வாறொழுகு மேனையுயிர்க்கு
முன்னொன்றனது முதிரொளிஞான
மறியாப்பச்சைச் சிறுபுழுக்கவர்ந்த
வண்டெனவுயிரைக் கொண்டிடுமெயிரது

தன்னைநோக்கித் தானதுவாகி
ஐவகைத்தொழிலு மெய்வகையுணர்வும்
பிரியாவாறு பெற்றுத்
திரியாப்பெரியோர் திரட்சிசேர்ந்திடுமே

இ-ள், பாசமும் பசுவு மீசனுமென்றிம் மூவகையுணர்வு தான்முதன்மையவாய் - பதிபசுபாச மூன்றிற்கும்பதி ஞானமென்றும் பசுஞானமென்றும் பாசஞானமென்றுஞ் சொல்லப்பட்ட ஞானங்களாகியே தனித்தனியே முதன்மையாயிருக்கையால்,—பாசமைம்புலன் றேசுறவுணர்த்த - பாசஞானமாகிய விந்திரியங்கள் விடயங்களை மயக்கமறவறிவிக்க.—பசுத்தனிஞானம் புசித்திடுமன்றே - பசுவினதொப்பிலாத ஞானமான தந்தவிடயங்களைப்புசிக்கும்,—இனையஞானம் பிரிவுறவெரியாச் செந்தழறருநெறி - இந்தவிரண்டுவகைஞானமு நீங்கினவிடத்துக் கொழுந்துவிட்டெரியாமற் கிடக்கிற சிவந்ததழலையொக்கு மென்றுசொல்லலாம் - அந்தமிலுயிருமறிவா யொன்றுமறியாதன்றே - அவத்தையிலழிவில்லாமலிருக்கிறவான்மாவு மறிவாயிருக்கையிலே சுட்டியறிவதற்குண்டாகாது,—(இதுபெந்தம்,) (மேல்முத்தி)--இவ்வாறெழுகுமேனை யுயிர்க்குமேனை யுயிர்க்கு-இப்படிநாடோறுங்கேவலசகலப்பட்டு வருகிறவான்மாவுக்கு.—முன்னோன்றனது முதிரொளிஞானம்-மூன்று முதலுக்குள்ளே முந்தினபதியினுடைய மிகுந்தவறிவாயிருக்கிற ஞானமானது,—அறியாப்பச்சைச் சிறுபுழுக்கவர்ந்தவண்டென வுயிரைக்கொண்டிடும் - ஒன்றுமறியாமற் கிடக்கிற பச்சைநிறத்தையுடைய சிறியபுழுவினை வந்தெடுத்துக் கொண்ட வேட்டுவாளியைப் போல வொன்றுமறியாத வான்மாவை வந்தெடுத்துக்கொள்ளும்,—உயிரது தன்னைநோக்கித் தானதுவாகி-புழுவான தந்தவேட்டுவாளியினை நினைந்திருந்த வேட்டுவாளியினுடைய சொரூபமானாற்போல வான்மாவுமந்தச் சிவனைத் தியானம்பண்ணி யந்தச்சிவனுடைய சொரூபமாகி.—ஐவகைத்தொழிலு மெய்வகையுணர்வும் பிரியாவாறுபெற்று - வேட்டு

ளியான புழுவைக்கொட்டு வாளிசெய்யுந் தொழிலுஞ்செய் ததனுடைய சொரூபமுநீங்கா ததனுடைய கூட்டத்தோடுங் கூடியிருந்த தன்மைபோல வித்தவான்மாவுஞ் சிவனுடைய பஞ்சகிருத்தியங்களுஞ் சர்வஞ்ஞயத்தையுந் தன்னைவிட்டுநீங்காதவாறுபெற்று,—திரியாப் பெரியோர் திரட்சிசேர்ந்திடுமே - முன்னே யிக்தவறிவுந் தொழிலும் பெற்று நீங்காமலிருக்கிற பெரியோர்கள்கூட்டத்தோடுங் கூடிநிற்கும், (௬)

சிவசமவாதிசங்கற்ப முற்றிற்று,

—()—

## சிவசமவாதி சங்கற்ப நிராகரணம்

சேர்ந்தமும்மை வாய்ந்தஞானமு
மொருகாலன்றித் தெரிவுறநிற்கி
லொண்பொருள்காணும் பண்பினுக்கொருகாற்
பரிதியுமதிரி மெரிதருவிளக்கும்
வேண்டலின்றே காண்டருகாலை
யொன்றொன்றாக நின்றறிவுறுமெனி
லந்நியமறியா மன்னுயிர்பொறிபுலன்
றானேவறியா தலைவர்க்குலகினை
யானுவறிவா லறியவேண்டின்றே
கொழுந்தழறருமெனி லழுந்திடுமவத்தையிற்
றிரியாத்தலைவர் தெரியாத்தன்மைவர்
தெய்தலாகா மெய்யுறுபொருட்கு
முன்னர்க்கீடந் தன்னனையெடுத்த
வேட்டுவெளியல்பு கூட்டல்பெறாதே
வண்டிறும்படாவுட் கொண்டதுதனக்கு
மந்திரவாதந் தந்ததுமில்லே
யெடுத்திடுமதனா லடுத்ததென்றலையிற்

கருமயிர்க்குட்டி யிருசிறைப்பறவை
யாயினதெடுத்த தாயர்சாற்றிலரே
பிறவிப்பேதத் துறையிவைகிடக்க
வேயுமித்திற னாயுங்காலை
யோகத்தருதி யாகத்தருமே
ஞானமின்மையென் றோதுவதெவனெனி
னுயிருமுணர்வும் பயிலுதலின்றி
வேட்டுவனுருவ மென் றுமுணர்வு
கூட்டுதலாலுருக் கூடுதலானு
முத்தியிலிறையிற் பற்றுதலின்றித்
தன்னுருவிணைந்த பின்னதனுணர்வு
மாறுதலானு மூறுடைத்தன்றே
யீசனதியல்பரு ளெய்துயிரியற்றல்
பேசுதறவறெனப் பெருமறையறைய
வைந்தொழிலுயிருந் தந்திடற்குமோ
யாவதென்முன் னுவலர்பெருமான்
பண்டொருமுதலை யுண்டமைந்தனை
வரவழைத்தனனென் றுய்பிழைப்பிலதநுந்
தந்திடவேண்டு மென்றனரன்றே
யின்னவைகிடக்க முன்னவன்றன்மை
யெய்தினரெல்லாச் செய்தியுஞ்செய்வ
திரும்பெரியெய்தித் தருஞ்செயறகவெனிற்
பொருணிலைகிடக்க வொருதிட்டாந்தப்
பேறேயாயிற் சீருக்கதுவிய
புனலொருபுடைசேர் கனறருமாயினும்
வேறொருபொருளை நீறுக்கிலதே
நெருப்பெனுமிதனி னுருத்தனிகாட்டுக
வங்கியுமொன்றிற் றங்கின்றலது
தன்றொழினடத்தா தென்றறியினீ

யிருட்பனற்செய்தி தரும்பரிசளதோ
யதுமொ ழோலகை பொதிதருங்காலை
யதிற் செயலினைத்து மிவன்செயலாமா
லவனிவனாகி யிவனவன்செய்திக்
கென்னைவையென்னிற் பின்னுறுசெயலு
மதன்செயலன்றி யிவன்செயலாகி
யிவன்செயல்பேயின் றன்செயலாகி
யிருந்தவாறெனத் தெரிந்திடவேண்டிற்
றெரியாதாய்த் தரியிற்கனெனை
லெரிந்ததென்னு மிதுதகுமன்றியு
மவ்விவனை லிவனவன்செய்தி
யென்றுசெய்வா னென்றியமதத்தா
யெல்லாமறிதல் செல்லாதுயிர்கள்
சிற்றறிவெனுஞ் சொற்றவறுறு
மென்பதெனலகை தன்பதமடைந்தோர்
கொண்டவாறு கண்டனமென்னின்
மூங்கையர்நருற் றோங்கியகுணங்குறி
செய்யதெனின்னும் பௌவமுற்றழுந்தினு
மாழிகொள்ளா தாழியினலைபுன
லதனுற்கருத்து முதலுளதாக
வேண்டுமென்றே யீண்டினியமையு
மெல்லாமினுயிச் சொல்லாற்படும்பொரு
ளனைத்துந்தாக்கா தனிப்பரத்துற்றவர்க்
கெவ்வகையுணர்வு செய்வதென்செப்புக
வொன்றிரண்டு மொன்றாதலகி
னின்றபோதுயிர் நேரமன்றே
முத்தியுற்ற நற்றவரவையிடை
சேர்வரென்றனை சார்தருமுத்தி
சாலோக்கியமோ சாயுச்சியமெனிற்

பந்தமுற்று கந்தலகழித்த
நெறியினோடறிவு பிரியாப்பெற்றி
வேண்டுமென்றதற் கீண்டிவரிவா
திருப்பரென்பதற் குருத்தான்வேண்டு
மண்ணலதருளி னண்ணியிருப்பினுஞ்
சீவன்முத்தரென் றோதினரகன்று
நீங்கியுமுருவ நீங்காதாயி
னோங்கியமுத்தி யாவதென்றுரைக்க
செடியுடலறுகாக் குடிலைகொடுக்குமென்
றோதினைநீயே பேதாய்பகட்டுர
வொளிர்சினைமுச்சித் தளிரெனுமிதழ்க
மிச்சாரூப நச்சினரென்னின்
மும்மலத்தேது மின்மையதன்றே
யிதுவனர்முத்திப் பதமெனவியம்புவர். (ஈங்கிதைநிற்க)

இ-ள், சேர்ந்த மும்மை வாய்ந்தஞானமு மொரு காலன்றித் தெரிவுறலிற்கில் - இங்ஙனங்கூடிவருகிற பதிபசுபாச மூன்றினுக்கும் பொருந்தப்பட்ட மூவகைஞானமு மொக்கக் கூடிநின்றே யொருமுதல்க ளறியப்பட வேண்டுமோயின்,— ஒண்பொருள் காணும்பண்பினுக் கொருகால் - கண்ணான தழகியபதார்த்தங்களிலே யொன்றைக்காணவேண்டின வொழுங்கினுக்கு விசாரித்துப்பார்க்குமிடத்து.— பருதியுமதியு மெரிதருவிளக்கும் - ஆதித்தனாகுதல் சந்திரனாகுதல் எரிகிறவிளக்காகுதல்.— வேண்டலின்றே காண்டற்காலை - ஒன்றுகாட்டக் காணுமதொழிந் திவைமூன்றுங்கூடி நின்றுகாட்டக் கண்ணொன்றைக் காணவேண்டுவதில்லை, ஆகையால் மூன்றுஞானமுங்கூடி யறியுமென்ற தத்தமன்று.— ஒன்றொன்றாக நின்றறிவுறுமெனில் - அப்படியன்று காணும் ஒவ்வொன்றாகத் தனித்தனியே நின்றொவ்வொரு விடயங்களையறியுமென்று நீ-சொல்லில்,— அக்கிய மறியா மன்னுயிர் - நிலைபெற்றவான்மாவுக்குவிடயங்கள்வேறாயிருக்கையினாலேபசுஞான

க்தானாக வொருவிடயங்களை யறியமாட்டாது,— பொறிபுலன்றானே யறியா - பாசஞானம் ஜடமாகையினாலே யொரு விடயங்களையுமறியாது,— தலைவர்க்குலகினை யானறிவா லறியவேண்டின்றே - பதிஞான மநாதியே பேரறிவாயிருக்கையினாலே விடயங்களைப் புதிதாகச் சுட்டறியவேண்டுவ தில்லை,— கொழுந்தழற குமெனி லழுந்திமவத்தையில் - கருவிகளின்றி யாணவ மலத்தினாலே மறைக்கப்பட்டிருக்கிற வவத்தையி லான்மாவறியாமற் கிடக்கிற கொழுவியதழலை யொத்திருக்குமாயில்,— கிரியாத் தலைவர் தெரியாத்தன்மைவுந் தெய்தலாகா - ஒருகாலத்திலு மிவனை விட்டு நீங்காதகத்தாவை யிவனறியாமலிருக்கிற முறைமை பொருந்துத லிவனுக் குண்டாகாது. (இது பெந்தத்தைமறுத்தது,) (மேலான்மா பஞ்சகிருத்தியஞ் செய்யுமென்பதை மறுக்கிறார்.) — மெய்யுறுபொருட்கு முன்னர்க்கிடந் தன்னெனவெடுத்த - சிவனோடொன்று பட்டிருக்கிற முத்தித்தன்மைக்கு முன்னே யொன்று மறியாமற்கிடந்த பச்சைப்புழுவைத் தன்னுடைய சொரூபமாக வேண்டுமென்றெடுத்த, - வேட்டுவனியல்பு கூட்டல்பெறாதே - வேட்டுவாளியி னதியல்புவமையாகக் கூட்டிச்சொல்லுகிறதுபெறாது,—வண்டிறும்பெடா வுட்கொண்டது தனக்கு மந்திரவாதந் தந்ததுமிலதே - இவனிந்த வான்மாக்களுக்கு மந்திரவுபதேசங்களைச்செய்து தற்சொரூப மாக்கினாற்போல வேட்டு வாளியானது புழுவையெடுத்ததற்கு மந்திரவுபதேசங்களைச்சொல்லித் தற்சொரூபமாக்கினதாகச் சொல்லப்படாதாகையால் நீவேட்டுவாளியையும் புழுவையு முத்திக்குவமைசொன்ன தத்தமாகாது,—எடுத்திடுமதனா லடுத்தசென்றறையில் — அப்படியன்று காணும் அந்தவேட்டுவாளி சென்றெடுத்ததுதானே யுபதேசமாகவந்தப்புழுதற் சொரூபமானதென்று நீ-சொல்லில்,— கருமயிர்க்குட்டி யிருசிறைப்பறவை யாயினது - கருமைபொருந்திய மயிர்க்குட்டிப்புழுவானது பெரியசிறகினையுடைய வண்டிப்பறவையாய்ப்போனது,—எடுத்த தாயர்சாற்றிலரோ - அதற்கொருதாயாய்வ

க்தெடுத்ததுபதேசமாய்ப் பறவையாய்ப்போன தென்றேருவரு ஞ்சொல்லுவாரில்லை -பிறவிப்பேதத் துறையிலடைக்க- முகை யால்பச்சைப்புழுவு மயிர்க்குட்டியுங் கன்மத்துக்கீடாக வச்சமா றினது முத்திக்குவமை சொல்லப்படாது இவைகிடக்கட்டும்இத ன்றியும்,—ஏயுமித்திற ஞயுங்காலை யோகத்தருதியாகத் தருமே புழுவேட்டுவாளியானாற்போல வான்மாவுஞ் சிவசொரூபமான தை விசாரிக்குமிடத்து யோகத்திற்குச் சொல்லலா மொழிந்து ஞானத்திற்காகாது,—ஞானமின்மையென் றேறுமெனவி ல் - இதுஞானமார்க்கமாகாதென்ற தெதினாலேயென்னில்,—உ யிருமுணர்வும் பயிலுதலின்றி - ஆன்மாவுஞ் சிவனுங்கூடியொன் றுபட்டிருக்கிறதே முத்தியென்றிருக்கையிலே வேறுபட்டிருக்கு மென்று நீசொன்னதன்றியும்,—வேட்டுவனுருவ மென்புழு வுண ர்வு கூட்டுதலா லுருக்கூட்டுதலாலும் - வேட்டுவாளியி னுடைய சொரூபத்தை மெல்லியபுழுவினுடைய நினைவானது கூடுதலா லே யுனக்குமுத்தியிலொரு சரீரங்கூடுகையாலும்,— முத்தி றையிற்பற்றுதலின்றி - மோக்ஷத்திற கத்தாவினிடத்துக் கூடியி ருத்தலன்றி வேறாயிருக்குமென்று சொன்னதோஷமன்றியும்—தன்னுருவணைந்த பின்னதனுணர்வு மாறுதலாலும் - புழுவான து வேட்டுவாளியினுடைய சொரூபத்தைப் பெற்றபின்பு முன் னுண்டானவறிவதற் கில்லாதபடியினாலும்,—ஊறுடைத் தன்றே இத்தை ஞானத்தினாலுண்டாகிய முத்தியென்று சொல்லுகிறது குற்றமுடைத்தாம்,—ஈசனதியல்பரு ளெய்துபிரியற்புல் வுந்தாவு க்குண்டாகிய பஞ்சகிருத்தியங்களைத் திருவருளைப்பெற்றவான்மா க்கள் செய்யுமென்ற,—பேசுதறவறெனப் பெருமறை யறைய - சொல்லுகிறதுங் குற்றமென்றுபெரியவேதமானது சொல்லுமிட த்து.—ஐந்தொழி லுயிருந்தக்கிடறருமோ - கத்தாவினாலேசெய்கி ற பஞ்சகிருத்தியங்களை யான்மாவினாலே செய்யப்படுமென்றதுத காது,—ஆவதென் முன்னு ளுவலர்பெருமான் பண்டொருமுத லையுண்டமைந்தனை வரவழைத்தனவொன்றுய்-அப்படிச்சொல்லு

கிறதென்னதான் முற்காலத்திலே நம்பியாரூரர் முன்னேயொரு முதலை விழுங்கின பிள்ளையை வரத்தக்கதாகவழைத்தாரில்லை யோவென்றுசொன்னாய்,—பிழைப்பிலதநீ தந்திடவேண்டுமெ ன்றனரன்றே - அப்படிச்சொன்னது குற்றமில்லை அந்த முதலை வாயிலேநின்று பிள்ளையினையழைத்ததும் (திருப்பாட்டு.) "உ ரைப்பாருரையுகந் துள்கவல்லார்தங்களுச்சியா, யரைக்காடரவா வாதியுமந்தமுமாயினாய், புரைக்காடுசோலைப் புக்கொளியூரவிநா சியே, கரைக்கான்முதலையைப் பிள்ளைதரச்சொல்லுகாலனையே. இப்படித்தேவரீ ரந்தப்பிள்ளையைத்தந் திடவேண்டுமென்றுசொ ன்னதொழிந்து தாமாகவரவழைத்த தில்லையாதலாற் றிருவருளை ப்பெற்றவரின்மா பஞ்சகிருத்தியஞ் செய்யுமென்று நீசொன்னது ந்தமன்று,—இன்னவைகிடக்க முன்னவன்றன்மையெய்தினர் - இதுவெல்லா நீர்சொன்னது கிடக்கட்டும் கர்த்தாவினுடையதிருவ ருளைப்பெற்றவர்களே,—எல்லாச் செய்தியுஞ்செய்வர் - கர்த்தாசெ ய்கிற சிருஷ்டிமுதலான கிருத்தியங்களெல்லாஞ்செய்வார்கள். அ தென்போலவென்னில்,—இரும்பெரியெய்தித் தருஞ்செயறகவெ னில்-இரும்பான தக்கினியைப்பொருந்தியதனுடைய சொரூபத் தையும் பெற்றதனுடைய தொழிலையுஞ்செய்தாற்போல வென்று நீசொல்லில், பொருணிலைகிடக்க வொருகிட்டாந்தப் பேறேயாயி ன் - திருவருளைப்பெற்ற நம்பியாரூரராலே பஞ்சகிருத்தியங்களை ச்செய்யப்பட்டதில்லையென்று பிரத்தியக்ஷமாகக் கண்டிருக்கை யிலே யதைப்போட்டிரும்பு மக்கினியும்போலேயென்று திருஷ் டாந்தத்தினாலே யுனக்குச் சாதிக்கலாமாகில்,—நீருக்கதுவியபுன லொருபுடைசேர்க ணறகுமாயினும் - ஆரவாரித்துச் சொல்லுகிற தண்ணீரான தக்கினியைப்பொருந்தி யைக்கியமாயிருந்தாயினு ம்,—வேறொருபொருளை நீறுக்கிலதே - அக்கினியைச்சேர்ந்த வி ரும்புபோல விந்தவெந்நீர் வைக்கோல் முதலானவற்றைச் சுட்டு ப்பொடியாக்க மாட்டாது, அந்தத்தண்ணீரோடே நிற்கையாற்சுட் டதில்லைகாணும் தனித்துநின்றாற் சுடுமென்று நீ-சொல்லில்,—

நெருப்பெனுமிதனி னுருத்தனிகாட்டுக - நெருப்பென்று சொல்லுகிற வித்தப்பூதரூபந்தனித்துநின்று தன்னுடையதொழிலைச்செய்யமாட்டாது, எங்கேயாயினுந் தனித்துக்காரியப்பட்ட துண்டா காட்டுவாயாக,—அங்கியு மொன்றிற்றங்கி நின்றல்லது தன்றொழிலடத்தாதென் றறியினிநீ - அக்கினியுமொன்றைச்சார்ந்து நின்றல்லது தன்னுடையதொழிலைச் செய்யமாட்டாதென் றறிவாயாக, ஆகையால்,—இரும்பனற்செய்தி தருப்பரிசளதோ - அக்கினியிரும்பைச்சார்ந்துநின்று தன்னுடைய தொழிலைச் செய்ததொழிந்து இருப்பக்கினியுடைய தொழிலைச் செய்ததுண்டோ? ஆகையாற்றிருவருளைப்பெற்ற வான்மாக்கள் பஞ்சகிருத்தியஞ் செய்வார்களென்று நீசொன்னதுத்தமன்று,— அதுவெம்ஞானலக்க பொதிதருங்காலை - ஒருவனையொரு பசாசுபிடித்தவிடத்து.—அதன்செயலனைத்து மிவன்செயலாமால் - அந்தப்பசாசினுடைய செயலெல்லா மிவனுடையசெயலாக் காணப்பட்டதோ வில்லையோ? ஆகையால் அருளைப்பெற்றவர்கள் பஞ்சகிருத்தியஞ்செய்வார்களென்று நீசொல்லில்,—அவனியவுகி லிவனவன்செய்திக்கென்-அந்தச்சிவனிந்த வான்மாவாயிருந்து தன்னுடையதொழில்களைச்செய்தானுமாகில் இந்தவான்மா வந்தச்சிவனுடைய தொழிலைச்செய்வதெதனாலே செய்யும்,—அவையென்னில் - அந்தத் தொழில்களைச்செய்தற் கிந்தவான்மாவுரித்தென்று நீசொல்லில்,— பின்னுறுசெயலு மதன்செயலன்றி யிவன்செயலாகில்-ஒருவனைப்பேய்பிடித்துவிட்டு நீங்கினபோ திவன்செய்த செயல்களெல்லா மிவனுடையசெயலாமோ அந்தப்பேயினுடைய செயலாமோ அதெல்லாம் பேய்ச்செயலாகாதிவனுடைய செயலாமாகில்,—இவன்செயல்பேயின்றன்செயலாகியிருந்த வாவெனத்தெரிந்திடவேண்டும் அப்படியிவனுக்குப் பேய்பிடித்தபோது செய்த தொழில்களையுமறியவேண்டும் அறிடப்படாததென்னென்று நீ, சொல்லில் தெரியாதாகில்-அப்படியிவனுக்குப் பேய்பிடித்தபோது செய்ததொழில்களை யறியப்படாதாகில்,—புரியிற்கடுங்கண லெரிந்ததென்னுமி

துதகும்-புரியினிடத்துக் கடிதாயுள்ள வக்கிரிகூடிநின்று தன்னு டையதொழிலைச் செய்தாற்போலச் சிவனுமான்மாவினிடத்திலே நின்றுதன்னுடைய தொழிலைச்செய்த தொழிந்தான்மாசிவனுடை யதொழிலைச் செய்யமாட்டாது,...அன்றியுமவனிவனுகி லிவனவ ன்செய்தி-இதன்றியுமந்தச் சிவனொருகாலத்திலும் ஜநந மரணமி ல்லாதவன் இந்தவான்மா வொருக்ஷணப்பொழுதிலே ஜநநமரண ப்படுகிறவன் இப்படிக்கொத்தவான்மா வப்படிக்கொத்த சிவனு டையதொழிலைச் செய்தானுமாயினும்,...என்றுசெய்வானென்றி யமதத்தாய்-எந்தக்காலத்திலேசெய்து நிறைவேற்றுவான் உன்ம தத்தொடே கூடியிருக்கிறவனே இதற்குத்தர முண்டாகிற்சொல் (இம்ஃதான்மாபஞ்சகிருத்தியஞ் செய்யுமென்பதைமறுத்தது,) (மே லான்மாவிற்கு சர்வஞ்ஞத்துவ முண்டென்பதை மறுக்கிருர்,)— எல்லாமறிதல் செல்லாதுயிர்கள்-இதுவன்றியும் சர்வஞ்ஞத்துவமா ன்மாவுக்குண்டென்று சொன்னுய் எல்லாத்தையுமறியும்பகுதியா ன்மாக்களுக் குண்டாகாது எல்லாத்தையுமறிந்திருக்கிற திருவரு ளினிடத்திலே பதிகையினுலே யிவனுமெல்லாத்தையுமறிவனெ ன்று நீசொல்லில்,...சிற்றறிவெனுமிச் சொற்றவராகும்- இந்தவா ன்மா கிஞ்சிஞ்ஞனென்று சொல்லுகிறசொற் பழுதாம்,... என்ப தெனலகை தன்பதமடைந்தோர் கொண்டவாறு கண்டனமென் னில்-என்றுநீர் சொல்லுகிறதென்ன பேயினுடைய பதவியைப் பெற்றவர்க ளந்தப்பேய்க்குண்டாகிய வருகாலத்தி னிகழ்ச்சிகளை யெல்லாஞ்சொன்னது கண்டோமேயென்னில்,...மூங்கை யந்த ருற்றோங்கிய குணங் குறி செய்வதென்-ஊமையுமாய்க் குருடனு மாயிருக்கிறவ னொருவனை யிவையெல்லாங் குறைவற் றிருக்கிற பேய்ப்பிடித்தவிடத் தவனுவழுங்கிச் சொன்னதுமில்லை கண்டெ ரிந்தொன்றைக் கண்டதுமில்லை, ஆகையால் பேயின் றன்மையெ ல்லாம் பிடியுண்டவனுக் குண்டாகாது இன்னும் பௌவமுற்றமு ந்திறுநாழி கொள்ளாதாழியினலேபுனல் - இதன்றியு நாழியானது சமுத்திரத்திலே பொருந்தியமிழ்த்தினுலு மலையையுடையவந்தச்

சமுத்திரநீரையெல்லாங் கொள்ளமாட்டாது ..அதுபோற் கருத்து
முதலுளதாகவேண்டும் - அப்படியிருக்கையிலே பொறியோடு
ங்கூடியிருந்தாலு மான்மாவுக்குள்ள வறிவுண்டாமொழிந்து சுத்
தாவுக்குள்ள வறிவெல்லாமுண்டாதாக வேண்டும். .. அன்றேயி
ண்டினியமைப்பர் அநாதியிலே யிப்படியிருக்கையிலே நீ யிவ
விடத்தருளோடுங்கூடின வான்மா வெல்லாத்தையு மறியு மென்ற
சொல்லையினிவிடுவாயாக. அதேதெனனில்,.. எல்லாமெனுமிச
சொல்லாற் பிற பொருளனைத்துங் கூறுகலா தனிப்பரத்துற்றவர்க்
கெல்லாவகையுணர்வு செய்வதென் பெயர்க்க - சர்வமுமென்றுசொல்
லப்பட்ட சொல்லினாலுண்டாகிய பொருளனைத்திலுந் தோய்வற
நிற்கிற வொப்பற்றசிவனிடத்திலே பொருந்தினவர்க் கெந்தமு
றைமை சர்வஞ்ஞபமுண்டான தயவிடத்துச்செய்யப் போகிற
தொழிலேதுசொல்லுக. ஆகையால் சிவனைப்பெற்றவர்களுக்குச்
சர்வஞ்ஞியத்துவ மென்பதுகூடாது. (பசுஞானமாவுக்குச சர்வ
ஞ்ஞியத்துவ முண்டென்றதை மறுத்தது.) (மேமன் முத்தியைம
றுக்கிறார்.) இதன்றியும்....ஒன்றெனவு மொன்றுதலகிளின்
றபோதுயிர் கேராமன்றே - முத்திவிலான்மாவுஞ் சிவமுமொன்
றுமென்னிலொரு முதலில்லையாம் அப்படிப்பரமுத்தியடையாம
ற்சரீரத்தைப்பெற்று ஜீவன்முத்தனா யிருக்குமென்னில் அப்படி
யிருந்தவான்மா சிவனுக்குச்சமமாகாதே. ஆகையாலீதத்தமன்று
இதன்றியும்,...முத்தியுற்ற நற்றவரவையிடை சேர்வரென்றனை
- முன்னே திருவருளைப்பெற்றவர்கள் முத்தியைப்பெற்றிருக்கிற
நல்லதவத்தினையுடைய பெரியோர்களுடைய கூட்டத்திலேயே
சென்றிருப்பர்களென்று சொன்னாய்,...சார்தரு முத்தி சாலோக்
கியமோ - இப்படிப்பொருந்தினவர்களென்று நீ சொன்னமுத்தி
சாலோக்கிய முத்தியைச்சொன்னாயோ,...சாயுச்சியமென்னில் அ
ப்படியன்றாகாலும் நான்சாயுச்சியமுத்தியைச் சொன்னேனென்
னில்,...பந்தமுற்றகந்தலகழிந்தவறிவிரேடறிவு - ஆன்மாக்களை
ப்பொருந்தின மலங்களைப்போக்கின சுத்தாவிலுடனே யான்மா

கூடினவிடத்து,... பிரியாப்பெற் வேண்டுமென்றதற்கு - பிரியா மலொன்று பட்டிருக்கவேணுமென்ற வியல்பினுக்கு, ..ாண்டிவ ரிவ்வாரிருப்ப ரெனபதற் குருத்தானவேண்டும் - இவ்விடத்தந்த ப் பரமுத்தியைப்பெறறவாகள் முன்னேமுத்தியைப்பெற்றிருக் கிற பெரியோர்களோடுங் கூடியிருப்ப ர்களென்றுநீசொல்லுகை யாலிவர்களுக்குமொருசரீர முண்டாகவேண்டும். இதன்றியும், ...அண்ணலதருளி னலணியிருப்பினுஞ் சிவன்முத்த ரெனவே தினா-கந்நாலினுடைய திருவருளைப்பெற்றுப் பரமுத்தியையடை யாமலிந்தச்சரீரத்தோடேயிருந்தார்களாயினும் மோகஙளைச்சீவன்மு த்தரென்று நல்லோர்கள் சொன்னார்கள். அப்படி நல்லோர்கள் சொல்லப்பட்டிருக்கையிலே,.. அகன்றுநீங்கியு முருவ நீங்காதா யின் - இந்தசசரீரத்தோடிருந்தானை விட்டுப்போய்ப்பரமுத்தியைப்பெ ற்றவிடத்து சரீரத்தோடிருந்தானை நீங்காமலிருக்குமாயின்,— ஒருவி டமுத்தியாவ தென்றுரைக்க - அதுமேலானபரமுத்தியாய தெ ப்படித்தானசொல்லுக அப்படியன்றகாணும்.—செடியுடலனு காக் குடிலைகொடுக்குமென ருேதினைநீயே - அந்தமுத்தியிந்தவ சுத்தமாயா தேகத்தோடிருந்தாது சுத்தமாயா தேகத்தைக்கொடுக் கவந்தச் சரீரத்தோடுங் கூடியிருப்பார்களென்று நீ சொன்னமு றைமை,—பேதாய் பகட்டுர லொளிரிசினை முச்சித்தளிரெனுமி துதரும்-வேம்பினதடி சுகட்டைக கைக்குமென்றறிந்து விட்டுவி ளங்காநின்றகொம்பினுனியிற்றளிரைக்கசவாதென்றுகொண்டத ற்கொக்கும், இதன்றியும்,—இச்சரூப நச்சினரெனனில் - சுவே ச்சையிற்றேலையெடுக்கிற சரீரத்தோடுங்கூடிப் பிரியப் பட்டிருந் தார்களென்று நீசொல்லின்,—மும்மலத்தேது [illegible] - ஆகையாலேமுத்தியின் மலமாயாகன்மங்களி லொருமலமாகு னுநீங்கின்றில்லையாம்;— இதுவனர்முத்திப் பதமென [illegible] —இப்படிச் சரீரத்தோடுங்கூடியிருக்கிற முத்தியைச் [illegible] [illegible] என்று நல்லோர்கள் சொல்லுவார்கள், [illegible] [illegible] பருகாக்கொல்லைக்க பெத்தமுத் [illegible] (௬)

சிவசமவாதிசங்கற்ப நிராகரணம்-முற்றிற்று.

---

## சங்கிராந்தவாதிசங்கற்பம்

—()—

(நீங்காதொளிருயிர்)
விளக்கெனநிற்கு மளப்புறமறிவின்
றிறைவர்க்கேது மறியவேண்டின்றே
மன்னுமான்ம சந்நிதியளவிற்
காந்தபசாசத் தேய்ப்பவாய்ந்த
வுயிருடலியக்குஞ் செயலுறுபூட்டைப்
பலவகையுறுப்பு மிலங்கியதொழில்போ
லைம்பொறிபுலன்க ளின்புறுமன்றே
யினையவாய்தலி னிகழ்தருபயனவை
யந்தக்கரண முந்தியுணர்ந்திடு
மிவையகல்வழியையம் பொறிபுலனிகழா
வுயிர்நீங்கிடி லுடல் செயலிலதன்றே
யிவ்வகைவினையின் செவ்விநடத்தும்
பழமலநீங்க நிகழுங்காலை
யேற்றோர்முகவொளி தோற்றுங்கலனெனத்
தலைவனதருளுயிர் நிலவிடுநிலவக்
காட்டத்தங்கி மாட்டத்தங்கிய
தன்மையுமலத்துப் புல்லையினிப்பும்
போன்றதுவாகித் தோன்றிடுமேதனாற்
பசுகரணங்கள்சிவகரணங்க ளாகமாறியறிவு
மேகமாமுயி ரியாமெனவின்றே,

இ-ள். நீங்காதொளிருயிர் விளக்கெனநிற்கு மளப்புறமறிவின்று - ஆன்மாவானது நீங்காத பிரகாசத்தையுடையவிளக்கைப்போலே சுட்டறநிற்கும். அதுவிதுவென்று சுட்டியறிகிறவறிவிதற்கில்லை,—இறைவற்கேது மறியவேண்டின்றே - கர்த்தாவிகாரமில்லாதவ ராகையாலே யவருக்கொன்றையு மறியவேண்டுவதி

ல்லை,—மன்னுமான்ம சந்நிதியளவிற் காந்தபசாசத்தேய்ப்பவாய் ந்தவுயிருடலியக்கும் - காந்தமானது விகாரமறநிற் வதன்சந்நி தியிலே யிரும்புகாரியப் படுமாறுபோல நிலைபெற்ற வான்மாவி காரமறநிற்க வதன்சந்நிதியிலே பொருந்தப்பட்ட பிராண வாயு வான துடலைக்காரியப்படுத்தும்,—செயலுறு பூட்டைப் பலவகை யுறுப்பு மிலகியதொழில்போல்-சமைக்கப்பட்ட நீரிறைக்கிறபூட் டையினது பலவகையாகிய வவயவங்களும் விளங்கப் பட்ட தொழில்களைச் செய்தாற்போல,—ஐம்பொறிபுலன்க ளின்புறும ன்றே - பஞ்சேந்திரியங்களுஞ் சத்தாதிவிடயங்களை யநுபவியாநி ற்கும்,—இனையவாய்தலி னிகழ்தருபயனவை யந்தக்கரணமுந்தி யுணர்ந்திடும் - இந்தவிந்திரியங்கள் பொருந்தப்பட்ட விடயங்க ளையறிவதற்குமுன்னே யந்தக்கரணங்க ளறியாநிற்கும்,— இவை யகல்வழிஇ யைம்பொறிபுலனிகழா - இந்தவந்தக்கரணங்க ணீங் கினவிடத்துப் பஞ்சேந்திரியங்க ளோடுஞ் சத்தாதி விடயங்கள் பொருந்தாது, (இதுசகலம்,)—உயிர்நீங்கிடி லுடல்செயலிலதன் றே - பிராணவாயு நீங்கினவிடத்துடல் சேட்டையின்றி கிடக்கு ம். (இதுகேவலம்.)—இவ்வகைவினையின் செவ்விநிகடத்தும் - இப்படியான்மாவின் சந்நிதிமாத்திரத்திலே பிராணவாயு வான து பிராரத்துவத்தைப் புசிப்பித்துக்கொண்டு நிற்கும், (இஃதவ ன்பெத்தம்) (மேன்முத்தி.)—பழமலநீங்கி நிகழுங்காலை - இப் படிப்பிராரத்துவ மநுபவித்துவருமிடத் திவனுக்காதியாகியவா ணவமலநீங்க விருவினையொப்புஞ் சத்திநிபாதமும்வந்தவிடத்து, —எற்றோர்முகவொளி தோற்றுங்கலனென - எடுத்துப்பார்த்தவ ர்கள் முகத்தினது பிரதிபிம்பம் தோன்றுகிறகண்ணாடியைப்போ ல்,—தலைவனதருளுயிர் நிலவிடும் - கர்த்தாவினுடைய திருவருளா ன்மாவிடத்திலேபொருந்தும்.—நிலவக் காட்டத்தங்கி மாட்டத்த ங்கியதன்மையும் - இப்படித்திருவருள்பொருந்தவே விறகினிட த்துநெருப்பைக் கொளுத்தினபோ தந்தவிறகுகெட்டக்கினியான துபோலவும்,— அளத்துப் புல்லைவயினீப்பும் போன்றது வாகித்

தோன்றிடும் - உப்பளத்திற்போட்ட புல்லும்வைக்கோலுங் கெட்டுப்போனதன்மைபோலவு மிந்தவான்மாவுந் தன்னுண்மைகெட்டுப்போன தன்மைபோலவு மிந்தவான்மாவுந் தன்னுண்மை கெட்டு அருட்சொருபமாய்த் தோன்றாநிற்கும்,...அதனாற் பசுகரணங்கள் சிவகரணங்களாகமாறி யறிவுமேக்மா முயிரியானெனவின்றே - அறிவிரண்டாய் நில்லாமலருளோடுங் கூடியொன்றாம் பின்னையிந்தவான்மா விற்கியானெனை தென்கிறதில்லை.

சங்கிராந்தவாதிசங்கற்ப-முற்றிற்று.

---

## சங்கிராந்தவாதிசங்கற்ப நிராகரணம்.

—()—

இன்றுணர்வாயி னென்றியுயிரொளிர்
திடம்போலத் தாபந்தரினிருள்
செறியுநதன்மையெ னறிவிலதாகி
லொளியெனவுரைத்த தெளிவதற்கேதாஞ்
சந்நிதியளவில் மன்னுஞ்செயலுடல்
காந்தம்போல வாய்ந்ததென்ற
தன்மையுமுணராப் புன்மையதன்றே
யுயிருடலியக்கிற் றுயில்பெறுங்காலைச்
செய்ததென் மனுநி யெய்துயிர்பொறிபுல
னடத்தவாவியுஞ் சடத்தனவாயிற்
பூட்டையிற்பூணி கூட்டல்பெறாதே
புலனைம்பொறியி னிலவிடுமென்றனை
யஞ்சுமொருகாற் றுஞ்சாதறிதற்
கழிவென்றருச் செழுமலரிலைபலங்
கனிதருவதுபோ லினையவைவைத்து
மொன்றொன்றாக நின்றறிவுறுமெனி
லொன்றின்பயனனி யொன்றறியாதா

விதியேயல்லது சதுமெனவிருசெவி
யிருகூற்றொருகாற் றெரியாத்தன்மைவந்
தெய்துமநாதியு மெய்யுயிர்ச்செயலும்
தனக்கிலதொருவர்க் கெனத்தெளிகிலையே
நோக்குறுமொளி நீக்காதாலெனக்
கருத்தன்மை முருகாம்போல
கொடுத்தநுகோடற் கடுத்தனன்றே
காட்ட தங்கி கூட்டக்கூடு
மிருணாடியற்கை வெஞ்சழருங்கா
வப்பளந்தறிந்த ற்பலாலங்கள்
சடுத்தபேறுங் கொடுத்ததுகொள்ளுந்
நன்மையாயுறு மெனக் கின்மையதன்றே
யுறுமுறுகருவி சிவமயமாமெனக்
கூறியனையாகம் வேறுருக்காரா
தென்பதெனைமுற் றுன்பத்துடைக்குந்
திருவருண்மருவ வரியனவென்னி
லருளுறுமாயா விருளினதாங்கொல்
சத்தப்பரிச ரூபரசகந்த
மெத்திறத்தினதரு ளியம்புகவன்றியு
நிறைந்துநீயாய் நின்றனையேனு
மறைந்தைம்புலனும் வாராயென்றுங்
கரணமெல்லாங் கடந்தனையென்று
பரணமையைத்தி னப்புறத்தென்று
முன்னருட்டலைவர் பன்னினரெனவு
மினியவையொழிய வறிகுவதெவ்வா
றென்றனிற்கலிக் கொன்றியவின்பங்
கூறுதற்குமருட் பேறினையன்றே
யேகமுயிரறி வாகமொழிந்தனை
யிருபொருளொருமை யுருவியதிலதே
யிவவகைகிடக்க மெய்வகைகேண்மதி.

தன்றியே .... லினைப்பொறியி னிலேவிடுமென்றனை - சத்தாதிவி டயங்களைப் பஞ்சேந்திரியங்களானது பொருந்தியநுபவிக்கு மென்றுசொன்னாய்,—அந்த மொருகாற்றுஞ் சாதறிதற்கரிதென் - சத்தாதிவிடயங்களைப் பஞ்சேந்திரியங்க ளநுபவிக்குமாயின் பஞ்சேந்திரியங்களு மொருகாலத்திலேயறியாம லொன்றறிந்தது மற்றொன்றறியாதிருப்பதற்குக் குறையென்....தருச்செழுமல ரிலை பலங் கனிதருந்தன்மைபோல் - கல்மரமான தொருகாலத்திலேயிலையையு மொருகாலத்திலே பூவையு மொரு காலத்திலே காயையு மொருகாலத்திலே பழத்தையுந் தோற்றுவித்து நின்றதன்மைபோல,—இவையனைத்து மொன்றன்பின்னொன்றாக நின்றறிவுறுமெனில் - இந்திரியங்களொடு மொருமொருவிடயங்களாக வறியுமென்று சொல்லின், ...ஒரிந்திரிய மனியொன்றறியாதா லிதுவே யல்லதா - ஒரிந்திரியத்தின் விடயத்தை மிகவுமோரிந்திரிய மறியாது; இதல்லாமலும்,—தருமெனவி நசெபி யிருகூற்றொருகாற் றெரியாத்தன்மைவர் ... - இந்திரியமாயிருக்கிற விரண்டு செவியினிடத் ... யேவ சேர்ந்த மொருகாலத்திலே சொல்ல ... செய்யுளையுமிருந்து மொருவன்சொன்னதையறியா மலிருந்த தன்மையைத் தெ பொருந்துகையினாலே யந்த விந்திரியத்தின் தொழில்க ளதற்கன்றி யான்மாவிற்காகும்போல,— மனுதியுமெய்யுமிச்செயலுக் கனைத்தில தொருவர்க்கெனத் தெளிகிலமே - அந்தக்கரணங்களுக்குஞ் சரீரத்திற்றும் பிராணவாயுவுக்குமுண்டானதொழில்களு மவையிற்றுக்கில்லை யான்மாவிற்கே யென்றறிவாயாக. எனவே யான்மாவவிகாரியல்ல விகாரியென்பதுகருத்து. (இச்சகன் றெந்தத்தைமறந்தது.) (மேன்முத்தியை மறுக்கிறார்.) இசன்றியு நீமுத்தித்தன்மை சொல்லுகிறவிடத்திலே கண்ணாடியிலே பார்த்தவர்களுடைய முகத்திலொளி யந்தக் கண்ணாடியிலே தோன்றினாற்போலக் கத்தாவினுடைய திருவருளுமிந்தவான்மாவிலே பிரகாசிக்குமென்று சொன்னாய்,—நோக்குமுகவொளிநீக்கா தாவெனக்கவருந் தன்மைமுகுரம்போல- கண்ணு

டியானது பார்த்தவர்களுடைய முகத்திலுண்டாகிய வொளியை
த்தள்ளிவிடாமற் றானேயென்னைத் தக்கதாகத் தன்னிடத்திலேக
வளீகரித்துக்கொண்டு நின்றாற்போல,—கொடுத்தது கோடற்கடு
த்துண்டன்றே - கொடுத்தது கொள்ளுந்தன்மை யுனக்கடுக்கும
தொன்றன்று. இதன்றியும்.—காட்டத்தங்கி கூட்டக்கூடுமிந்தன
த்தியற்கை வெந்தழுறுங்கா - விறகினிடத்துண்டாகியநெருப்பை
யான்மாவினோடுங் கூடிநிற்கிறவருவிற் குவமையாகச் சொல்லப்
படுவது நெருப்புவிறகைச் சுட்டுப்போடாமற்கொண்டிருந்தாலா
ம், அன்றி நெருப்புவிறகைச் சுட்டுப்போட்ட விகையினுலதந்த
மன்று. இதன்றியும், உப்பளத்தடுத்த புற்பலாலங்கள் சடத்தவே
னும் - அளத்திலேகூடின புல்லும்வைக்கோலும் ஜடமா யிருந்த
தாயினும்,—கொடுத்தது கொள்ளுந்தன்மையுண்டு னைப்பின்மைய
தன்றே - அதுதற்சொரூபத்தைக் கொடுத்ததனுடைய சொரூப
த்தை முன்னுருப்போலப் பெருந்தன்மையதற்குண்டு. உனக்கது
னுடைய முறைமைதானுமில்லை. இதன்றியும்,— அமமுறுகருவி
சிவமயமாமெனக்கூறினை - அஞ்ஞானங்களும் சேதனா யிருக்கி
றகருவிகளைச் சிவரூபமென்றுன் மதத்திலேசொன்னாய்,.., யாகம்
வேறுருக்கவராது - அதினைந்தச் சரீபத்தே யுண்டாகிய வாசை நீ
சொன்னதொழிந் திந்தச்சிவசொரூபஞ் சுத்தநின்மலமாயுமிந்தமா
யாசொரூப மசுத்தமலமாயுமிருக்கையா லிதுவதுவாகாது,—என்
ப்தெனவை முற்றுன்பர்துடைக்குந் திருவருண் மருவரியனவெ
ன்னில்- என்றுநீர்சொன்னதென்ன அந்தமாயாகருவிகடொன்று
தொட்டுவருகிற பிறவித்துன்பத்தைநீக்கித் திருவருளைப் பொருந்
தியதனுடைய சொரூபமாகைக் குரியதென்று நீசொல்லில்,...அ
ருளுரு மாயாவிருளினதாங்கொல் - அப்பொழுது திருவருளு மா
யையாகிய வஞ்ஞானமாகவேண்டும், (கொல்,அசை) சத்தபரிசரூ
பரச கந்தையெத்திற தினதருளிப்புக சத்தப்பரிசரூப ரசகந்த
ங்களோடுங்கூடி யறிந்துவருகிற மாயாகருவிகளுக்குத் திருவரு
ளைத்தினைதாரம் இதற்குத்தாமுண்டாகிற் சொல்வாயாக;...அன்

ரியநிறைந்து நீயாய்நின்றனையேனு மறைந்தைம்புலனாய் வாரா யென்றுங் கரணமெல்லாங் கடந்தனையென்று மரணமையைந்தி னப்புறத்தென்று. முன்னருட்டலைவர் பன்னினரெனவு மினைய வையொழிய வறிருவதெய்வாரென்ற நிற்கலிக்கொன்றியவின்ப ங்கூறுதற்கும் - இதன் றியும் காளத்தியந்தாதி. 'நிறைந்தெங்கு நீயேயாய் நின்றனுமென்று, மறைந்தைம்புலன்காண வாராய்,— சிறந்த, கணியாருந்தண்சோலைக் காளத்தியண்ணாய், பணியாயே லென்னுண்பரிசு,, என்றும். திருவாசகம் "கரணங்களெல்லாங் கடந்து நின்றகறைமிடற்றன். சரணங்களேசென்று சார்தலுமே தானெனக்கு மரணம் பிறப்பென் றிவையிரண்டின் மயக்கறுத்த கருணைக்கடலுக்கே சென்றூதாய்கோத்தும்பி,, என்றும். தேவா ரத்திருப்பாட்டு 'பையநாகப் பள்ளிகொள்வா னுள த்தானும் கைகளாடைய யானைக் கால்விரலா லடர்த்தானு ங், பொய்யஞ்சிவாய்மைகள்பேசிப் புகழ்புரிந்தார்க்கருள் செய்யு மெய்யச்சிவப் பத்தனு மாருரமர்ந்தவம்மானே.,, என்றும் முற் காலத்திலே திருவருளைப்பெற்ற பெரியோர்களருளிச் செய்தார்க ளென்று நான்சொல்லவு மிந்திரியங்களைவிட்டா விதனுடைய வறி வு ஜீவியாதாகையாலிந்த விந்திரியங்களன்றித் திருவருளையறியும் பகுதியெப்படியெனறுகேட்கிற வுனக்குச்சொல்லுகிறது ஒருவ னுமொருத்தியுங் கூடியநுபவித்த வின்பத்தைத் தானநுபவியாத வெலியாயுள்ளவனுக்குச் சொல்லுகிறதையொக்கும்,— அருட்பேறி னையன்றே-மாயைக்குள்ளே மயக்கப்பட்டுவருகிற பொருள்களை யறிகிறதுதானே பெருகக்கொண்டாயாகையாலிது வுத்தமன்று. இப்பதன்றியும்,—எகமுயிராவாக மொழிந்தனை - அருளு மான் மாவுங் கூடினவிடத் திரண்டுமொன்றாய் விடுமென்றுசொன்னாய் —இருபொருளோருமை மருவியதிலதே - இரண்டுமுதல் கூடி யொருமுதலாய் நிற்குமென்பதுண்டாகாது, இவ்வகைகிடக்கமெ ய்ம்மைகேண்மதி—இங்ஙனம் பலவாகச்சொன்ன வத்தங்களைப் போட்டு நாம்சொல்லப்போகிற சத்தியத்தைப் புத்திபண்ணிக்கே ட்பாயாக. (மதி-அசை.) (௧௨)

சங்கிராந்தவாதி சங்கற்பநிராகரண-முற்றிற்று.



# ஈஸ்வர வவிகாரவாதி சங்கற்ப நிராகரணம்

---

இருந்தல்கேள்வி திருந்தியுயிர்க
ளறிவெனில்வாயிற் பொறிபுலனெனலினை
மற்றவைபற்றி யுற்றறிந்திடுதலி
னறிவெனவழங்கு முயிரெனவுரைத்தல்
காணுங்கண்ணினன் கைகொடுதடவிப்
பூணும்பொருளின் பெயர்பலபகர
லென்னுங்கிளவி தன்னொடுநேருமே
யலவைப்புலன்கட் கவைகப்பொறிகளைச்
செவ்விதினிறுவலி னறிவினைச்செப்பினை
யறிவிலாமைகண் டனையினைபுலற்றுப்
பொறிகளைவலி னறிவொடுபொருந்தில்
கண்டதோர்பொறியாற் கொண்டிடவேண்டு
முதவியதொன்றுங் கதுமெனவியற்றின
ருண்டோவென்னிற் கண்டனமேனாட்
கடவுளிற்கடிமலர் முடுகியமதன
னங்கமங்கக் தங்கிடக்கிடந்தது
கையின்றிரளிற் செய்யசிறுபொறி
மாட்டிமூட்டின தன்றேமீட்டுந்
தேனமர்தவிசி னான்முகனுச்சி
யறுத்ததுங்கருவி பொறுத்தோவன்றே
யீசனதியல்பு பேசுதறவிர்க
காழிமாநகர்க் கவுணியர்கடவுண்
ஞானமாகிய கற்பதிகங்க
ளெழுதுறுமன்பர்த மின்புறுமொழியாற்
களிறெனவணைந்த கன்மனப்புத்தன்
முருட்டுச்சிரமொன் றுருட்டினானன்றி

வாய்ந்தவாளொன் றேந்தினரிலரே
யென்றதுயிர்வாள் கொன்றதென்பதுபோற்
றனித்துணையருளாற் றணித்தனரென்ப
வாதலின்வாயி லனவிளிலறிதலி
லேதமிலுயிர்க் கெய்துதலிலதே
யிருட்குவிளக்கொன் றேந்தினர்போல
மருட்குஞான மன்றுதலுளதே
யென்றனைகருவிக ளியாவுமசேதனந்
தூன்றியவுயிருந் துரியத்தன்மைய
ஞாதலினந்த ரனைவருங்கூடித்
தீதறவருநெறி தெரிபுமென்றற்றே
நீர்நிழலனைய சீ பெறுகடவுளைச்
சேர்ந்தவர்க்கின்பம் வாய்ந்திடுமென்றனை
பாசவமென்றுஞ் சேதனமின்மையி
னினைத்தோர்வம்மி னென்பதுந்துன்பம்
வினைத்தோர்தம்மில் வெறுப்புமொன்றிலதே
பொடித்திடுசொப்புள் வெடித்திடுபாதம்
வெய்யபூழியி னுள்ளுறவழுங்கி
யாற்றுதலின்றி யாறியங்கினர்முன்
னூற்றிடுமென்று சொல்லவுமிலதா
லிவ்வகைக்கடவுட் கியாப்புதறவறே
பாசஞானப் பழிவழியொழிக
வீசனதருள்வழியியம் புவன்கேண்மதி,

இ ள், இருந்துன்கேள்வி - இப்படியிருந்தது நீகேட்டகேள்வி நான்சொன்னதற்குக் குற்றமென்ன,—இருந்திடுமுயிர்களறிவெனில், வாயிற்பொறிபுலனென்னை - இருத்தமுண்டாகிய வான்மாக்கள் அறிவோடுங்கூடி யிருந்ததாமாயிற் சத்தாதி விடயங்களை யறிதற்கிந்திரியங்கள் வேண்டுவதில்லை, இந்த விந்திரியங்களைக் கொண்டறிகையினாலே யான்மாவுக் கறிவில்லையென்பதவ

ன்கருத்து,—பற்றவைப்பற்றி யுற்றறிந்திடுதலின் - அந்தவிந்திரிய
ங்களை யான்மாபொருந்தி யொருவிடயங்களை யுற்றறிந்துவருகை
யினாலே,—அறிவெனவழங்கு முயிரெனவுரைத்தல் - ஆன்மாவை
யறிவென்று சொல்லப்படுமென்று நீசொல்லுகிறது,- கணுங்கண்
ணினன் கைகொடுதடவிப்பூணும் பொருளினபெயர் பல புகற
லென்னுங் களவிதன்னொடுநிகருமே - கண்ணிரண்டுந் தெறிகிறவ
ன்கண்ணைக்கொண்டு பதார்த்தங்களைக்கண்டு சொல்லாமற்கை
களைக்கொண்டுதடவி கைகளினாலே தட்டினபண்டங்களுடைய
பலபெயர்களைச் சொன்னனென்கிற சொல்லோடொக்கும். ஆன்
மாவறிவாயிருக்கையிலே தானறியாம லிந்திரியங்களைக் கொ
ண்டறிந்ததென்று சொல்லுகிறது. இதன்றியும்,— அவைப்புலன்
கட் கவ்வப்பொறிகளைச் செவ்விதினிறுவலி னறிவெனச் செப்பி
னை - ஆன்மாவிற்கறிய வேண்டினவந்த விடயங்களுக்கேற்ற வந்த
விந்திரியங்களைச் செவ்வையிலே மாறுபாடற நிறுத்திக்கொண் ட
றிகையினாலே யான்மாவை யறிவென்று நீசொன்னாய்,— அறிவி
லாமைகண்டனம் - இதுகொண்டே யான்மாவுக் கறிவில்லை யெ
ன்கிறதுகண்டோம்,—அவைபுலற்குப் பொறிகளேவலி னறிவொ
டுபொருந்தில் - தன்னொடுபொருந்த. வேண்டின விடயங்களுக்
கேற்ற விந்திரியங்களையேவிக் கொள்ளுகையினாலே யான்மாவறி
வோடுங் கூடியிருக்குமென்று நீசொல்லில்,— கண்டதோர்பொ
றியாற் கொண்டிடவேண்டும் - ஆன்மாவறிவேயாகி லிந்தவவத
ரத்திற்குக் கிட்டினதோ ரிந்திரியத்தைக்கொண்டுதனக்குவேண்
டினவிடயத்தைப் புசிக்கவேண்டும், அதில்லாதபடியாலே யான்
மாவறிவன்று. பின்னும்,—உதவியதொன்றாற் கதுமென வியற்
றின ருண்டோவென்னில் - சோத்திரத்தைக் கொண்டு சத்தத்
தையறிவதொழிந்து யாதொன்றுகிட்டின விந்திரியங்களைக் கொ
ண்டு சடக்கெனவோர் தொழிலைச்செய்தவர்களு மிந்த பூமிக்குள்
ளே யுண்டோவென்னில், கண்டனம் - அப்படிக்காணப்பட்டது
ண்டு, அஃதெவ்வனேயென்னில்,— மேனாட்கடவுளிற் றடிமலர்

முடுகிய மதனன் - முற்காலத்திலே கர்த்தாவினுடைய யோகத்தைத் தவிர்க்கவேண்டி மன்மதன் மணம்பொருந்தின புஷ்பபாணத்தைக்கொண்டு விட்டினபோது,—அங்கமநங்கந் தங்கிடக்கிடந்தது - அவனுடைய சரீரமானது அசரீரமாகிப் பொருந்தத்தக்கதாகச் சாம்பராய்ப்போய்விட்டது,—வையின்றிரளிற் செய்ய சிறுபொறிமாட்டி மூட்டினதன்றே - கண்கொண்டு பார்த்த தொழிந்தவன் மேலே வைக்கோற்றிரளையைக் குவித்துச்சிவந்த சிறிய நெருப்புப்பொறியைமாட்டி யூதியெரித்ததல்லவே,—மீட்டும்-இதன்றியும்,— தேனமர்தவிசி னான்முகனுச்சி யறுத்ததுங் கருவி பொருந்தாவன்றே - வண்டுகள்பொருந்திய தாமரைத்தவிசின் மேலேயிருக்கிற பிரமாவினுடைய நடுவிற்றலையை கைநகங்கொண்டு கிள்ளிப்போட்டததொழிந்து ஒருவாட் கொண்டறுத்துப் போட்டதில்லை,—ஈசனதியல்பு பேசுதறவிர்க - நானுன்மாவுக்குச் சொல்ல நீ கர்த்தாவைக்கொண்டுவந்து சொல்லுவானேன் அதை விட்டான்மாக்களிலே யுண்டாகிற்சொல்,...காழிமாநகர்க் கவுணியர்கடவுள் - சீர்காழியாகியபெரிய நகரிடத்துண்டாகிய கவுணியகோத்திரத்திற்கெல்லாந் தலைவராகியசம்பந்தராலே,— ஞானமாகிய நற்பதிகங்க ளெழுதறுமன்பர்த மின்புறுமொழியால் - அருளிச்செய்யப்பட்ட ஞானமாகிய நல்லதிருப்பதிகங்களை யெழுதப்பட்டவண்மையுடைய சம்பந்த சரணாலயருடைய வினிய வாக்கினால்,—களிறெனவணைந்த கன்மனப்புத்தன் முருட்டுச் சிரமொன்றுருட்டினதன்றி - மத்தயானையைப்போ லெதிர்ந்துவந்த புத்தனுடைய மொட்டந்தலையை யுருண்டுவிழத்தக்கதாகச் செய்ததல்லது,—வாய்ந்தவாளொன் றேந்தினரிலரே - கூர்மைபொருந்திய வாளை யெடுத்துக்கொண்டல்லவே, ஆகையாலே யான்மாக்கள்கண்டதோர்பொறியார் கொண்டிட வல்லார்களென்று சொன்னது,—என்றது மீர்வாள்கொன்றதென்பதுபோற் றனித்துணையுருவாற் றணித்தரென்ப-ஈர்வாள்கொன்றதென்றால் அவ்வாள்கொன்றதாகாம லந்தவாளைக்கொண் டொருத்தன் கொன்றாற்போல

வொப்பில்லாத கத்தாவினுடைய வநுக்கிரகத்தினாலே புத்தனு
டைய தலையைத்துண்டித்துப் போட்டார்களென்று பெரியோர்க
ள்சொல்லுவார்கள் - ஆதலின் வாயிலளவினிலறிதலி லேதமிலறி
வுயிர்க்கெய்துதலிலதே - ஆகையாலிந்த விந்திரியங்களுடையவெ
ல்லையிலே நின்றறிந்துவருகையினாலே குற்றமற்றிருக்கிறவா
ன்மாவிற்குண்டாகாது, திருவருளறிவிக்க வேண்டுமே. (இது
பெத்தத்தைமறுத்தது.) (மேன்முத்தியை மறுக்கின்றார்.)— இருட்
கு விளக்கொன்றேந்தினாற்போல - இருளினிடத்திலே யொருப
ண்டத்தை யெடுக்கவேண்டினவர்கள் கையிலே விளக்கைப்பிடி
த்துக்கொண்டந்தப் பண்டத்தை யெடுத்தாற்போல,— மருட்கு
ஞானமன்னுதலுளதே யென்றனை - இவனுடைய வஞ்ஞானமா
கிய விருணீங்குகைக்கு ஞானவிளக்கருளைப்பெற்று நிற்கத்தக்கதா
கக் கத்தாவநுக்கிரகஞ் செய்யுமென்று நீசொன்னாய்;— கருவிக
ளியாவுமசேதனந்துணறிவுயிருந் துரியத்தன்மையன் - தத்துவ
ங்கள்முப்பத்தாறும் ஜடம் ஆணவமலத்திலே செறியப்பட்ட வா
ன்மாவுந் துரியத்திலே நிற்பானொருத்தன்,- ஆதலினந்தானைவ
ருங்கூடித் தீதறவருநெறி தெரியுமன்றற்றே- ஆகையால் இதுத
ன்னிற்கூடித் திருவருளைப்பெற்றது தமக்குக்காட்டாகச் சிவனை
ப்பெறுமென்றது அநேகங்குருடர் தம்மிற்கூடிக் குற்றமற்றிருக்
கிறதொருபெரிய வழியைக்கண்டந்த வழியேபோயோரூரிலே
சென்றார்களென்று சொல்லுதற்கொக்கும், இதன்றியும்,— நீரி
ழலனைய சீர்பெறுகடவுளைச் சேர்ந்தவர்க் கின்பம்வாய்ந்திடு மென்
றனை- நீரைப்போலவு நிழலைப்போலவும்பக்ஷப்பிரதிபக்ஷமில்லா
மலிருக்கிற சிறப்பினையுடைய கர்த்தா தன்னைவந்துகூடின பக்கு
வான்மாக்களுக்குப் பேரின்பமுண்டாக வநுக்கிரகஞ்செய்வனெ
ன்றுநீசொன்னாய்,...பாதவமென்றுஞ் சேதனமின்மையின் - மர
மானதெப்பொழுதும் அறிவில்லாமல் ஜடமாயிருக்கையினாலே,
—இளைத்தோர் வம்மினென்பதுந் துன்பம்விளைத்தோர் தம்மில்
வெறுப்புமொன்றிலதே - வெயிலினாலே யிளைத்துப்போகிறவர்க

ளை வாருங்களென்று பிரியபட்டழைத்துந் தன்னை வெட்டிட போட்டவர்கள்பேரிலே யகிதப்படுத்துவது மில்லை. இதன்றியும் —பொடித்திடு கொப்புள் வெடித்திடுபோதம் வெய்யபூமியி னுண் ணுறவழுங்கி யாற்றுதலின்றி - பொடியினாலே யுள்ளங்காலிலே கொப்பளங்கொண்டதுடைந்து சுடுகிறபூமியுள்ளே பட்டழுந் தியதனாலே யாற்றமாட்டாமல்,—ஆதியங்கிளார் முன்னேற்றிடுமெ ன்றுசொல்ல வுமிலதால் - வழிகடந்துவருகிறவர்கள் முன்னேம ரமானதுசென்றுதோன்றி யவர்கள் விதனத்தைத்தீர்த்ததென்கிற சொல்லு மதற்கில்லாதபடியாலே,—இவ்வகை கடவுட்கியப்புத றவிறே - நீருநிழலும்போலுமென்கிற அவிகாரவாதங்கத்தாவிற் குச்சொன்னது மிகவும்பழுதாம். ஆதலால் —பாசஞானப் பழிவ ழியொழிக வீசனதருள்வழி யியம்புவன் கேண்மதி - இனி சரீரச ம்பந்தமுநீங்காமற் கத்தாவையும் அவிகாரவாதஞ்சொன்ன குற் றத்தையுமுடைத்தாய் முந்துநெறியைவிட்டுக் கத்தாவினுடைய திருவருளின்வழி சொல்லுகிறேன் புத்திபண்ணிக் கேட்பாயாக (மதி - அசை.) (௧௪)

ஈஸ்வரவவிகாரவாதிசங்கற்பநிராகரணம்-முற்றிற்று.

—()—

## நிமித்தகாரண பரிணாமவாதி சங்கற்பம்.

புவனமியாவையும் புனிதனதுருவாஞ்
சிவமுஞ்சத்தியு மெனத்தெளியவற்று
ளசேதனமென்றொன் றறைதற்கிலதது
சேதனனுகர்பொரு ளிரண்டுமோரிறத்தே
யிதுவெனுமொன்றை யதுவாய்ப்படுத்துப்
பொதுமையினிற்கும் போதமென்றறிக
பொற்பணிப்பேதம் புரைவழியொருவழி
நற்பொனிற்றிகழ்வென நயப்பதொன்றன்று

லாவதுமாகா தொழிலதுமெனுமிப்
பாவகமுண்மை பாராதோர்க்கே
பாராதோரெனம் பல்லுயிர்பகர்தலி
னாராய்ந்துணர்க்கி னவைபிறவல்ல
பலபலபேத மிலவென் போருமில்
கண்ணினதொளியைக் கண்ணினதெனிலது
திண்ணியவிருளிற் செறிபொருடெரித்தனு
மின்மைமின்மினி யெனவிருகண்மணித்
தன்மைதானுந் தாவிலததனாற்
கண்ணினதுருவு மதிற்கதிரொளியு
நண்ணருஞ்சத்தி சத்தர்கணடிப்பே
யுலகேழனைத்திசை பத்தெனவொருவன்
பலவாய்நின்ற படியிதுவென்று
‘ஊனுயிரா யுணர்வாயென்று
மானக்கண்ணே மணியேயென்றுந்
தாமேதானாய் செய்தனரென்று
நாமேசிவமாய் நண்ணினமென்றுங்
காயாய்ப்பழமாய்ச் சுவையாய்நுகர்வு
மோயாதுண்போன் றானேயென்று
மறிவோன்றானு மறிவிப்போனு
மறிவாயறிவின் றானுமறிவுறு
மெய்ப்பொருடானும் வியந்திதுவெனப்படு
மப்பொருளியாவு மவனேயென்றுந்
தாய்தலைப்பட்டங் கொன்றாய்த்தென்று
மேதமதறநான் கெட்டேனென்று
மின்றுமின்று மிறையோனளித்தவை
பன்னிலெண்ணரும் பான்மைத்தாதலிற்
றருபொருள்கொள்பொரு டருவோன்கொள்வோ
னொருபொருளிவ்விய லுவப்பெனவுணர்க

நுகர்பொருள்சத்தி நுகர்வோன்சத்தனென்
றிகலறுமுணர்வுந் தெய்துலரிதே
நானவனெனுமிது நவைவழிகல்வழி
தானவனுகை யிதுசாயுச்சியம்
மித்திறன்றெளிய வுய்த்திடுமளவு
மிபாதொருவகையி னீதியதாகத்
தானிவழியே தலைநின்றென்று
மூனுயிர்சிவத்தி லொடுங்கிடநடத்தி
மூன்றுமுமலம் வீழ்ங்காலைக்
கருவிகளளவிற் புரிசருமறிவு
சாக்கிரங்கனவு நீக்கமில்சுழுனை
துரியமென்றவை பயிறரும்றிவு
தனிய நீதம் இரியாத்தன்மையி
லிறையருளுருதவுங் கறையறமாறி
யறிவேயாகும் பிறியாக்கருவிக
ணிரைமுதலவத்தையி லறிவிலதாகத்
துரியாதீதத் தோற்றந்
திரியாததுநற் சிவகதித்திறனே.

(இ-ள்) புவனமியாவையும் புனிதனதுருவாஞ் சிவமுஞ்சத்தியுமெனத்தெளி - இந்தப்பிரபஞ்சமெல்லாஞ் சிவசொரூபமாயிருக்கும் இதிலருவமாயிருக்கிறது சிவமு முருவமாயிருக்கிறது சத்தியுமென்று தெளிவாயாக,—அவற்று ளசேதநமென் றொன்றறைதற்கிலது - அந்தவிரண்டுவகைக்குள்ளு மசேதமாகச் சொல்லப்பட்டதொரு பொருளுமில்லை,...அதுசேதாலுகர் பொழுதிரண்டுமோர்திறத்தே - அருபமாயறிவாயிருக்கிற வனுபவிக்குமிடத்தக்த விரண்டுபெகுதியு மொன்றாயிருக்கும்,... இதுவெனுமொன்றை யதுவாய்ப்படுத்துப் பொதுமையினிற்கும் போதமென்றறிக - இதுவென்றுசுட்டப்பட்ட தொருவிடயத்தையநுபவிக்குமிடத் தந்தவிடயத்தானேயாய் அந்தவறிவென்றும் விடயமென்ற

மிரண்டாகாமற் பொதுமையிலே நிற்குமென்றறிவாயாக. இதன்றியும்,...பொற்பணிப்பேதம் புரைவழியொருவழி - பொன்றொன்றாயிருக்கையிலே பொன்னுக்கும் பணிக்கும் பின்னஞ் சொன்னாற்போலவறிவிக்கும் பிரபஞ்சத்திற்கு மொருபக்ஷ மிப்படியுஞ் சொல்லலாம்,—ஈற்பொனிற்றிகழ்வென வயப்பதொன்றன்றால்-நல்லபொன்னினுண்டாகிய மாற்றப்பணியிடத்துங்காண்கையாற் பொன்னும் பணியுமொரு தன்மையாகவிருக்கப் பொன்னையும் பணியையு மறிவிக்கும் பிரபஞ்சத்திற்கு மூவகையாகச் சொன்னதென்னதாமென்று கேட்கில்,—ஆவது மாகாதொழிவது மென்று மிப்பாவகமுண்மை பாராதோர்க்கே-இத்தவுவமையாம்பகுதியிந்தவுவமையாகாப் பகுதியென்று சொல்லுகிற விந்தப்பாவக முண்மையைத் தரிசியாதவர்களுக்காயிருக்கும், உண்மைபார்த்தவர்களென்றும் பாராதவர்களென்றுஞ் சொன்னதுகொண்டே யறிவிலே பின்னமுண்டென்னில்,— பாராதோரெனப் பல்லுயிர்பகர்தலின் - உண்மையைத் தரிசியாதவர்களென்று நான சொன்னதுகொண்டே நீயான்மாக்களைத் தனித்தனியே யொருமுதலென்றுசொல்லிற் பலவாகச் சொல்லப்பட்டிருக்கிற வான்மாக்கள்,—ஆராய்ந்துரைப்பினவை பிறவல்ல-அத்தன்மையை விசாரித்துச் சொல்லுமிடத் தந்தவான்மாக்கள் சிவனுக்கு வேறாயிருப்பதொன்றன்று எல்லாஞ்சிவமுதலேயென்றறி, இதன்றி,—பலபல பேதமிலவென்போருமில் - சிவமுமான்மாக்களும் பிரபஞ்சமுந்தனித்தனி யொவ்வொருமுதலென்று பலபேதங்களாகச் சொல்லுவார்களுமுண்டு அதுநித்தியமன்று, கண்ணொன்றொருமுதல் கண்டுவருமாபோல வான்மாவென்றொருமுதல் தனித்தறிந்து வருமிடத்திதனையில்லையென்பானே னென்னில்,— கண்ணினதொளியைக் கண்ணினதெனிலது-கண்ணென்றைறக்கண்டொருகிறகாக்ஷியத்தகண்ணுக் குண்டாயினபடிக் காண்கிறகண்,—இன்னியவிருளிற் செறிபொருடெரித்தலுமின்மை-நெருங்கியிருக்கிறவிருளுக்குள்ளே பொருந்தியிருக்கிற பொருளின்ன பொருளென் றுங்

றைக்காணும்பகுதி யுண்டோவில்லையோ. இதன்றியு,... மின்மினியென விருகண்மணித்தன்மை தானுந்தாவிலது -ஒருமின்மினியிருளை நீக்கினமரியாதியிரண்டு கண்மணியுங்கூடி யிருளை நீக்கிக் கண்டோமில்லை,... அதனாற் கண்ணினதுருவு மதிற்கதி ரொளியு கண்ணருஞ் சத்திசத்தர்கண்டிப்பே - கண்ணுடையவடிவு மதனிடத்தாகித்தப் பிரகாசத்தாலுண்டாகிய காக்ஷியுமிவையெல்லா மனதினாலே யெட்டுதற்கரிய சிவசத்திகளுடைய நாடகமென்றறிவாயாக. *ஈதெங்கே காணப்பட்டதென்னில்.—உலகேழெனத்திசைபத்தென வொருவன்பலவாய்நின்ற படியிதுவென்றும் - திருவாசகத்தில். "நிலநீர்நெருப்புயிர் நீள்விசும்பு நிலாப்பகலோன்,புலனாயமைந் தனோடெண்வகையாய்ப் புணர்ந்துநின்றா, னுலகேழெனத்திசை பத்தெனத்தா னொருவனுமே, பல்வாகிநின்ற வாதோணோக்கமாடாமோ, என்றும்,...ஊனாயுயிரா யுணர்வாயென்றும் - தேவாரத்தில். "ஊனாகி யுயிராகியதனுணின்ற வுணர்வாகிப்பிறவனைத்து நீயேநின்றாய், நானேதுமறியாமே யென்னுள்வந்து நால்லனவுந் தீயனவுங்காட்டாநின்றாய், தேனாருங்கொன்றையனே நின்றியூராய் திருவானைக்காவி லுறைசிவனேஞான, மானாய் நின் பொற்பாதமடையப் பெற்றாலல்ல கண்டங்கொண் டடியேனென்செய்கேனே,, என்றும்,—மானக்கண்மணியே யென்றும்-திருவாவடுதுறை தேவாரத்தில். "திருவேயென் செல்வமேதேனே வானோர்செழுஞ்சுடரே செழுஞ்சுடர்நற்சோதிமிக்க, வுருவேயென்னுறவேயென் னூனே யூனின் னுள்ளமே யுள்ளத்தினுள்ளேநின்ற, கருவேயென்கற்பகமே கண்ணே கண்ணிற் கருமணியே மணியாடு பாவாய்காவா, யருவாயவல்வினை நோயடையாவண்ணமாவடுதண்டுறை யுறையுமமரரேறே. ;, என்றும்,...தாமேதானாய் செய்தனரென்றும் - திருக்கடைக்காப்பில், "பத்திப்போர் வித்திட்டேப்பரந்த வைம்புலன்கள்,, என்னும் திருத்தாவச்சதியில், "தாமேதானாகச்செயுமவன்., என்றும்,— நாமேசிவமாய் [illegible] மென்றும்-திருவாசகத்தில், "சிவமாய தேவாவகதி லழுந்தாமே,, என்கிறதிருப்பாட்டில் "நாமொழிந்து சிவமான,, என்றும்;

—காயாய்ப்பழமாய்ச் சுவையாய் நுகர்வுமோயாதுண் போன்று னேயென்றும் - தேவாரத்தில், "தியாகி நீ ராகித் திண்மையாகி,, திருப்பாட்டில் "காயாகிப்பழமாகிப் பழத்தினின்ற விரதங்களுனு கர்வானுந்தானேயாகி,, என்றும்,—அறிவோன்றானு மறிவிப் போனு மறிவாயறிகின்றானு மறிவுறுமெய்ப்பொருடானும் விய ந்திதுவெனப்படு மப்பொருளியாவு மவனேயென்றும்—அந்தாதி யில் அம்மைவாக்கு. "அறிவானுந்தானே யறிவிப்பான்றானேய றி வாகின்றான் றானே - யறிகின்றது மெய்ப்பொருளுந்தானே விரி சுடர்ப்பாராகாயம், அப்பொருளுந்தானேயவன்,, என்றும்,—தா ய்தலைப்பட்டங் கொன்றாய்த்தென்றும்-திருவிசைப்பாவில்."மோ துலைப்பட்டகடல்,, என்னும்திருப்பாட்டில். "தாய்தலைப் பட்ட ங்குருகியொன்றாய்.,, என்றும்,—ஏதமதறநான் கெட்டேனென் றும் - திருவாசகத்தில், "வான்கெட்டுமாருதம்,, என்னும் திருப் பாட்டில், நான்கெட்டேன்,, என்றும்.—இன்னு மின்னுமிறை யோனளித்தவை பன்னிலெண்ணரும் ரன்மைத்து - முதலே சொல்லிவந்த திருவாக்குகளன்றியின்னமு மேலுமநுக்கிரகம்பெ ற்றதம்பிரான்க ளருளிச்செய்த செயல்களைச்சொல்லுமிடத்தெண் ணிறந்த பகுதியினையுடையது,— ஆதலிற் றருபொருள் கொள் பொரு டருவோன்கொள்வோ னொருபொரு ளியல்விய லுவப்பெ னவுணர்க - ஆகையாலே யொருவனொருத்தனுக்குக் கொடுக்கிற பொருள் தான்கொள்கிறபொரு ளொருபொருளினைக் கொடுக்கி றவ னந்தப்பொருளைக் கொள்கிறவ னெல்லாமொருபொருளாயி ருக்கு மிந்தமுறைமையுள்ளதாகிய வத்தமென்றறிந்து பிரியப் படுவா யாக, ஆகையால்,—நுகர்பொருள் சத்தி நுகர்வோன்சத்தனென் றிகலறமுணர்வு வந்தெய்துத லரிதே - இதனாற்புசிக்கப்பட் டிரு க்கிற சத்தாதிவிடயங்களு மந்தவிடயங்களைப் புசிக்கிறவிவனுஞ்ச த்திசிவமாகிய சைதன்னியம் இவையிரண்டும் வேறல்ல வென்று மாறுபாடறவறிகிற வறிவொருவிலுக் குண்டாகிறது மிகவுமரிது. (இதுபெத்தம்,) (மேன்முத்தி ) நானவனெனுமிது நவைவழி-ஆ

ன்மாவுந்தனியே யொருமுதல் சிவமுந்தனியே யொருமுதலாமெ
ன்றிங்ஙனந் துவிதபாவகமாகச் சங்கற்பித்துக்கொண்டு நிற்கிற
து குற்றத்தையுடைத்தாகிய வழியாயிருக்கும்,... நல்வழி தானவ
னாகையிது சாயுச்சியம் - நல்வழியானது தானொருமுதலறச் சிவ
முதலேயாய் நின்றுவருகைச் சாயுச்சியமென்று சொல்லப்படும்—
இத்திறன் றெளியவுயர்த்திடுமளவும்-இப்படியிவனுக் குண்டாகத்
தக்கதாக விவன்போதஞ்செலுத்துமளவும், — யாதொருவனாகையி
னீதியதாகத் தானறிவழியே தலைநின்று - சஞ்சாரத்தோடுங்கூடி
யிருந்தவன் அவற்றைவிட்டுத் தானின்றது நீதியாக விதுதமக்கு
முத்திக்குவழியென்று தன்னுடைய போதத்துக்குத் தோன்றின
வழியிலே தலைநின்று,—என்று மூனுயிர் சிவத்தி லொடுங்கிடநட
த்தி - கனவிலுநனவிலு மிந்தவுடம்பையுமுயிரையுஞ் சிவத்திற்கு
ள்ளே பொருந்தத்தக்கதாகச்செலுத்தி,—மூடுமுழுமலம் வீடுங்கா
லை-ஒன்றையுமறியவொட்டாமற்பொருந்திக் கொண்டுநிற்கிறவா
ணவமல நீங்குமவதரத்து,—கருவிகளளவிற் புரிதருமறிவுசாக்கிர
ங் கனவு நீக்கமில்சுழுனை துரியமென்றவைபயிறருமறிவு - சாக்
கிரஞ் சொப்பனஞ் சுழுத்தி துரியமென்றுசொல்லப்பட்ட நாலவ
தரத்திலு மறிகிறவவதரம் அறிகருவிகளிந்தவவத்தைகடோறு
மேற்றக்குறைச்சல்களாக நிற்கிறதாகவிருக்கும். ஆகையால் இந்
தக்கருவிகளெல்லாங்கழன் றொன்றுமறியாமற்கிடக்கிற வவதரந்
துரியாதீதம். (இதுகேவலம்)— துரியாதீதந் திரியாத்தன்மையி
லிறையருளுதவும் - இந்தத்துரியாதீதத்தை விட்டுநீங்காமனிற்கி
றவவதரத்திலேகர்த்தாவினுடைய திருவருளானது கருவிகளைகூட்
டியிவனுடையபெத்தத்தைஜீவிக்கப்பண்ணும்பொழுது,—நற
யறமாறியறிவேயாகும் ஆணவமல நீங்கிகருவிகளோடுங்கூடியறி
வாகிநிற்குநீ (இதுசகலம்(மேற்சுத்தாவத்தை,)—பிறியாக்கருவிக
ணிறை முதலவத்தையில் - இவனைவிட்டுநீங்காமனிற்கிற கருவி
முப்பத்தாறும் நிறைந்துநிற்கிற சாக்கிரவத்தையிலே,—அறிவி
லதாகத் துரியாதீதத்தோற்றந் துரியாதீதத்திலிருந்திறனே-எல்

லாக்கருவிகளுங்கழன்றிருக்கிற துரியாதீதந்தோன்றினவிடத் தந்தவவதார நீங்காமனிலை பெற்றுநிற்கிறதே யிவனுடையசிவகதி, எ-று. ()

நிமித்தகாரண பரிணாமவாதி சங்கற்ப-முற்றிற்று.

---

## நிமித்தகாரண பரிணாமவாதி நிராகரணம்.

—()—

இறம்பெறநீயிங் கறைந்தமைகருதிற்
புவனமியாவையும புனிதனதுருவெனி
லவன்முதற்காரண மன்றுமென்னி
னிமித்தகாரண நிகழ்த்துகவென்னி
யவனேகாரண மனைத்துமெனறைந்தனை
மண்டனிக்குலாலன் றண்டசக்கராதி
காரணமூன்று மோர்பேரணைந்த
தித்தாரணிதனிற் கண்டதுசாற்றுக
வத்தனியற்று மித்தொழில்பிறர்க்கோ
தனக்கோவீரேனு வெனக்கியம்புக
வீடெனிற்பித்தர் மாண்பறுந்தொழில்போற்
றலைமையுமறிவு மிலதெனவிகழ்வர்
தனக்கெனிலஃதமு னிற்பதொன்றன்றே
தன்போலறிஞருந் தலைவருமிலரான்
மின்போனிலைமையை வேண்டலும்பழுதே
பிறர்க்கெனிற்பிறரும் பிறர்க்காம்பொருளும்
பொருட்கமைகருவியு மதற்குபாதாகமுஞ்
செய்கையுமென்றோ ரைவகைத்தாளொடு
மாறுச்சைவர் கூறுமென்று
னிச்சித்தாந்த மவிசித்தாந்த
மென்சித்தாந்த வசித்தைநமற்றீறு

தசித்திலதென்னி லசித்ததென்னுல்லில்
உலகாயிதனும் பூதக்கூட்டஞ்
சலமேற்கொப்புட் டருமெனச்சாற்றினன்
றீயகருமச் சினர்சாவகர்பிறர்
ஞேயமில்லென நிகழ்த்தினரிலரே
காண்டல்விரோத நிற்பிறர்கணித்தில
ரீண்டனைத்துரைக்குமற் றியார்கரியுடலுஞ்
சித்தோசித்தின் சேர்வாற்சித்தெனிற்
கடபடாதியுமுடற் கட்சிதைவென்
றாபரவுயிற்போற் றனுவொழிந்திவற்றின்
மேவியவுணர்வு விரவிடுமென்னிற்
சடத்துயிர்போலெனச் சாற்றினையாகலி
னுடற்குயிரிறைமையை யொழிந்துண்டன்றே
தருதிட்டாந்தமுந் தாட்டாந்திகமு
மொருபொருளாகி னுவமைபெறாதே
யொன்றேயாகி னுடற்கிறைதாபரத்
தொன்றியநிலையில் விசேடமென்னுரைக்க
பூதச்சேர்வைப் பேதமென்றறையிற்
சேர்வைப்பேத மென்கொடுசெப்புக
கருமத்தளவில் வருமெனிற்பித்த
ருரையிற்றிகழு முணர்வொழிந்தனையே
கருமஞ்செய்வோன் கடவுளன்றுடலு
மருவிநின்றிருவினை வளராதுகாரா
கடவுளுமுடலின் கண்படறஞ்ச
விடர்கலமுறாத விறங்குதலேறாத
லெவ்வகையேனுஞ் செய்கையின்றாதலும்
பலகலையுல்கி னிலவுதலானு
மெண்ணருட்பொருளு மிரவியுமொழியக்
கண்ணெனவொன்று தானுளதிலதும்

பாசப்பகுதியு மீசனுமொழியப்
பசுவுமுண்டென் றிசையவேண்டின்றே
யிதுவெனுமொன்றை யதுவாய்ப்படுத்துப்
பொதுமையினிற்கு மாயையின்பொற்பெனப்
பொற்பணியாவும் பொன்னாந்தன்மையி
னிட்களசகளத் திருவுருநிலையு
மீசனேயெனப் பேசுவரன்றி
யருவுருவாகி வருமுலகென்னி
லனைத்துமாயை யெனத்தெளிகிலையே
யாவதுமாகா தொழிவதுமிலதெனு
பாவகமுலகா யிதனது பான்மை
கட்கொலைவெகுளி காமங்களவுக
ளுட்படுமிவைவிட மொழியாதாரிலர்
சோமபானஞ் சுராபானங்க
ளாமெனமறைக ளார்செவிப்பறைந்தன
மறையோன்புலைச்சியை மருவுமென்பது
முறையோவெனிலது புனைமொழியென்னிற்
சாதிபேத நீதிநீதவறினு
மேதியையேறு விழையாவிரும்புங்
கண்ணினதுருவு மதிற்கதிரொளியு
கண்ணருஞ்சத்தி நாடகமெனிலதற்
கேதுவும்பயனு மோதவேண்டு
நின்மொழிவிரோதமு நீடுலகியற்கையுந்
தன்மசாத்திரமுஞ் சகலமுமென்செயு
முலகேழெனவிறை பலவாந்தன்மை
கடமொடுசார்வங் கலசமாதிக
ளடனுறுகுயவ னுயினென்றுற்
றுனேயாகா வனவதாஞ்கா
னுயினனென்ப் தாக்கினனெனவே

யாறுயென்ப தனைத்துமவ்வகை
தாறுகாணமையைச் சாற்றிடுமென்க
தாமேயெனுமத் தனியேகார
மழிந்திலராதலே யாய்த்திலராதலிட்
டொழிந்திலர்பிரிவில ரெனுமிவையுணர்த்துங்
காயும்பழமுஞ் சுவையுநுகர்வ
தாயவன்றனு மவன்முதற்றென்னு
மகிலமுந்தெளிய வறிவோன்றனு
மகிலமுமறிஞரை யறிவிப்போனு
மறிஞர்க்கறிவா யறிகின்றோனு
மறிவிற்கறிபொரு ளாவோன்றனு
மகிலமுமேனி யானவனென்னுந்
தருபொருள்கொள்பொரு டருவோன்கொள்வோ
னொருபொருளாயி னுவப்புண்டென்க
நுகர்வோன்றனக்கு நுகர்பொருள்வேண்டிற்
றிகலறக்கிடையா திருந்தனிலையமும்
வேண்டாராயினு மெய்யுறவியாதிக
ளீண்டாதொழியா திறைக்கிவையீடல
சத்தியுஞ்சிவமுந் தாமேநுகருமென்
றித்திறனுணர்வுந் தெய்துவதெவர்க்கோ
தமக்கேயென்னிற் றுமுணராமையு
மமைப்பறவுணர்தலு மவர்க்கடைவன்றே
நானுமவனு நவையுலனுந்
தானவனுகையு நின்சாதனத்தில்
சகயோகத்தைச் சாயுச்சியமெனப்
பகர்வதுபதிபசு பாசத்தவர்க்கே
யாதொருவகையென வோதியதிறைநூல்
சொன்னவற்றொன்றன் றென்னில்வீடெளிதே
தானறிவழியே தலைப்பொருள்பிடித்து

மேனிகழ்பலமும் வீடளித்திடுமே
நிலையாக்கருவியை நிலையாக்கருதிப்
புலையாடுதலு மூலகாயிதன்பொருள்
சூட்டியமின்றிநற் கோலமெழுதுத
விட்டமதாயிற் கருவியுமிடங்களுங்
கருத்துறவுரைக்கத் தெரித்திடுமதீதத்
தறிவொன்றில்லோர்க் கிறையருளுதவுதல்
பிறிவறிவரியச் செறியிருளிடத்தோ
ரக்தகர்காண வந்தோரெம்மை
நீவிருங்காண வேணுமென்றுங்
கெடுத்தோர்தீபங் கொடுத்ததையொக்கு
மிச்செயற்கிறைவன் கொச்சயனன்றே
கருவிவசத்திற் றெரிவறக்காண
வேண்டுணரிலரா லீண்டறிவியாவுஞ்
சிவமேயென்று செப்பினையவமுறு
பொறிபுலனறியா வறிவதுபிரம
மென்றோர்க்குன்போ விடர்ப்படலிலதே
யேற்றங்கருவி யிருபதோடிரண்டும்
போற்றுமைந்தவத்தையும் புகறிரிமலமு
மீசனுமுயிரும் பேசினையஃதொழிந்
தொன்றேயாகு மென்றநின்னியல்பு
தாயர்மனைவியர் தாதியர்தவ்வைய
ராயவரெவரையு மோர்மையிற்காணுங்
கோகழிநார்த்தர் கொடுந்தொழிறருமே
யாகமற்றத னருணிலைதன்னிலை
யேகாயக ஞேயவிறைநிலை
நாசமில்பாசம் வீசியவினிலை
யினையனவையொன்று நினைவிலுமின்றி
யுன்டெனுமுணர்விற் கண்டதகருதி

விழுக்கொலும் புலன்கழி யொழுக்கமுமதுவாக்
கொண் டண்டையி லெண்டருமடங்கு
வந்தவர்செய்த பந்தையைப்பன்றே
புன்மைகளீக்க வுண்மைகேண்மதி,

(இ-ள்.) திறம்பெற நீயிங்கறைந்தமை கருதின்-நீ நன்று க வியவிடத்திற் பெத்தமுத்திகளைச் சொன்னவையிற்றை விசாரிக்குமளவி லெப்படியிருக்கது. இதற்குக்குற்றமென்ன,—புவனமியாவையும் புனிதனதுருவெனில் - பிரபஞ்சமாகக் காணப்பட்டிருக்கிறதெல்லாங் கர்த்தாவினுடைய சொருபமென்று நீசொல்லில்,—அவன்முதற்காரணம் - விசுவாதீதனாயுள்ள வந்தச்சிவன் இந்தப்பிரபஞ்சத்திற்கு முதற்காரணமாக வேண்டும்,— அன்றுமென்னில்-அவன்முதற்காரணமல்ல வென்றுநீசொல்லில்,— நிமித்தகாரண னேகொற்றாகவென் – அவனை நிமித்தகாரணமென்றுசொல்லென்று நான்சொல்ல,... நீயவனே காரணமனைத்துமென்றறைந்தனை - நீயின்னையு மந்தவிசுவாதீதனாயுள்ள சிவன்றானே நிமித்தகாரணமுந் துணைக் காரணமு முதற்காரணமு மெல்லாமென்றுசொன்னாய்,... மண்டனிக்குலாலன் றண்டசக்கராதி காரணமூன்றும் - மண்ணாகியமுதற்காரணமு மொப்பில்லாத குயவனாகிய நிமித்தகாரணமு மவனுக்குக் கருவியென்றுசொல்லப்பட்டதண்டசக்கராதியாகிய துணைக்காரணமு மிவைமூன்றும் மூன்றுகாரணமாயிருப்பதொழிந்து,—ஓர்பேரணைந்த தித்தாரணியதனிற் கண்டது சாற்றுக-மூன்றுமொருகாரணமாயிருக்கிற இந்தப் பூமியினிடத்துங் கண்டதுண்டாகிற் சொல்லுவாயாக. (நிமித்த காரணமென்றது சிவனை, துணைக்காரணமென்றது சத்திகளை, முதற்காரணமென்றது விந்துமோகினிமானென்கிற வுபாதானத்திரயங்களை.) இதன்றியும்,—அந்தனியற்று மித்தொழில் பிறர்க்கோ தனக்கோ வீரேன வெனக்கிதியம்புக - கர்த்தாசெய்கிறபஞ்சகிருத்தியம் பிறர்நிமித்தமாகச்செய்தருகிறானோ வல்லது தன்னிமித்தமாகச் செய்தருகிறானோ யவையிரண்டுமென்றிச் சும்மாபயண

ற்றதாகச்செய்து வருகிருனே இதனையெனக்குத் தெளியச்சொல்வாயாக, சொல்லமாட்டாயாயின் நான்சொல்லக்கேட்பாயாக— வீணெனிற் பித்தர்மாண்பறுந் தொழில்பொற்றலைமையு மறிவுமிலதென விகழ்வர்-சும்மா பயனற்றதாகச் செய்தானுமாகிற்பித்தராயுள்ளவர்கள்செய்கிற மாக்ஷிமையற்ற தொழில்போல விருக்கையாற்கத்தாவிற்குச் சர்வமுதன்மையுஞ் சர்வஞ்ஞத்துவமு மில்லையென்றுசொல்லிப் பெரியோர்களிகழ்வார்கள். ஆகையால்வீணுகச்செய்தானென்று சொல்லவொண்ணுது,—தனக்கெனி லஃதுமுனிற்பதொன்றன்றே-தன்னிமித்தமாகச் செய்தானென்னிலதுவுமுன்சொன்னது போலப்பொருந்துவ தொன்றன்று அதேனென்னில்,—தன்போலநிறைந்தவருமிலரான் மின்போனிலைமையைவேண்டலும்பழுதே - தன்னைப்போலச் சர்வஞ்ஞத்துவமுஞ் சர்வமுதன்மையும் பிறரொருவருக்கு மில்லாதபடியினுலே மின்போலத்தோன்றி மறைந்துபோகிற பிரபஞ்ச வியற்கையைத் தனக்குவேண்டிச் செய்தானென்னுமிது மிகவும்பழுதாம் ஆகையாற்றன்னிமித்தமாகச் செய்தானென்று சொல்லவுமொண்ணுது —பிறர்க்கெனிற் பிறரும் பிறர்க்காய்பொருளும்-இந்தத் தொழில்கத்தா பிறர்நிமித்தமாகச் செய்தானென்னில் தன்னை யொழிந்துபிறரென்றொருமுதலும் அந்தப்பிறரென்று சொல்லப்பட்டவர்களுக்கு வேண்டினவிடயமும்,—பொருட்கமைகருவியு மதற்குபாதானமும் - அந்தவிடயங்களைப் புசிக்கத்தக்கதாக வதற்கேத்த கருவியு மந்தக்கருவிகடோன்று கைக்கோருபாதானமும்,—செய்கையுமென்றுரை வகைத்தாஞெடு மாறுச்சைவர்கூறுர்- இந்த வுபாதானத்திலேநின்று பிரபஞ்சத்தைத் தோற்றுவிக்கிற சிவனேடுங்கூட விந்தவைந்துவகைக்கு மாறுபாடாகச் சைவராயுள்ளவர்கள்சொல்லார்கள்,—என்று னின்சித்தாந்த மவசித்தாந்தமென்-என்றிப்படியிருக்கையால்நீகொண்டிருக்கிறசித்தாந்தஞ்சித்தாந்தமல்லவென்று நீதானேசொல்-இதன்றியும்,—சித்தான்றவசித்தைமற்றினுதுசித்தாயுள்ள சிவம்அசித்தாயுள்ளபிரபஞ்சத்தைத்தன்னி

டத்திலேநின்றுந்தோற்றுவியாது அசித்தில்லதென்னில் அசித்தென்கிறவசராசரப்பிரபஞ்சத்திற்கில்லை. எல்லாஞ்சிற்சொரூபமே யென்னில், அசித்ததென்னுலகில் இந்தவுலகத்தின் கண்ணேபிரபஞ்சம்ஜடமாயிருப்பதென்று சாத்திரங்கள்சொல்லுவானேன். இதன்றியும் —உலகாயிதனும் பூதக்கூட்டஞ் சலமேற்கொப்புட்டகு மௌச்சாற்றினன்-உலகாயிதன்முதலாய்ப் பூதக்கூட்டமாயிருக்கிற பிரபஞ்சத்தை நீர்மேற்குமிழிபோலு நிலைநிற்பதல்லவென்று சொன்னான், அப்படியிருக்கையிலே நீயிந்தப்பிரபஞ்சத்தைச் சிற்சொரூபமென்றுசொன்னது வுண்மையன்று. (மேலவனுண்மாவில்லையென்னவுண்டென்கிறார்.)—நியசருமச் சினர் சாவகர் பிறர்லேய மில்லென நிகழ்த்தினரிலரே-பொல்லாத தொழிலுக் கேதுவாயிருக்கிற புத்தர்கள் சமணர்கள் மற்றுண்டான சமயிகளனைவருமிந்தச்சரீரத்திலே யோரறிவுண்டென்று சொல்லுவார்கள், அதனையொழிந் தன்னைப்போல வான்மாவில்லையென்று சொல்லுவார்களில்லை,—காண்டல்விரோதநிற்பிறர்கணித்திலர் - பிரத்திடக்ஷ விரோத நீநாட்டினாற்போலப் புறச்சமயத்திலுள்ளவர்களு மிப்படிச்சொன்னவர்களில்லை,—எண்ணோதுரைக்கு மற்றியார்கரி-இவ்விடத்து நீயான்மாவில்லையென்று சொல்லுகிறதற் கியார்தான்சாக்ஷி. இன்னானென்றொருவரைகாட்டு இதன்றியும்,...உடலுஞ்சித்தோ - இந்தச்சரீரமு மறிவோவறிவல்லவோ,—சித்தின்சேர்வாற்சித்தெனில் - அறிவோடுங்கூடி வாதனைப்பட்டு வருகையினாலே யிந்தவுடலுமறிவென்று நீசொல்லில்,...கடபடாதியு முடற்கட்சிதைவென்-கடபடாதிகளு மிந்தவுடலைப்போல வவையுமோருடல்களாயிருக்கையிலே யிந்தவுடலைப்போலச் சஞ்சாரமின்றிக் கிடப்பானேன்,—தாபரவுயிற்போற் றனுவொழிந்திவற்றின் மேவியவுணர்வுவிரவிடுமென்னில் - அந்தக்கடபடாதிகளிலே பொருந்திநிற்கிறபேரறிவு எல்லாரூபங்களினுங் கலந்து நிற்குமிடத்துயிர்கூடிநிற்கிறவுடம்பிலே தாக்கினாற்போல மற்றக்கடபடாதி களிலேதாக்கியில்லாதென்று நீசொல்லில்,—சடத்துயிர் போலெனச்

சாற்றினையாகலி னுடற்குயி ரிறைமையையொழிந் துண்டன்றே-உ
யிர்நிற்கிறவுடம்புபோல வுயிரில்லாத வுடம்புகளிலிந்தப்போறிவு
பொருந்தாதென்று சொன்னாயாகையா லிந்தவுடற்குக் கத்தாவை
யொழிந் தோருயிருண்டாகவேண்டும். நான் றிருஷ்டாந்தஞ் சொ
ன்னதுகொண்டே யப்படிச்சொல்லுகிறோமென்று நீசொல்லில்—
தருதிட்டாந்தமுந் தாட்டாந்திகமு மொருபொருளாகி லுவமையெ
ருதே - ஒன்றிற்குவமையாகச் சொல்லப்பட்ட திருஷ்டாந்தமு
முவமைப்பற்றிநின்ற தாஷ்டாந்திகமு மொருபொருளா யிருக்கு
மாயின் பொன்போலுங் கொன்றையென்கிற வுவமையிந்த வுல
கின்கணுண்டாகாது,—ஒன்றேயாகிய வுடற்கிறை தாபரத்தொ
ன்றிய நிலையில்விசேடமென்னுமைக்க பசுமுதலின்றிப் பதிமுத
லொன்றுமேயாகி லிந்தப்பதிமுதலெங்கு நிற்குமிடத்துத் தாபரங்
களைப்பார்க்க விந்தவுடலிற்கு விசேடமுண்டானதென்ன நீசொ
ல்லு,—பூதச்சேர்வைப் பேதமென்றறையில்-பூதக்கூட்டுறவினை
ற்றக்குறைச்சலென்று நீசொல்லில்,—சேர்வைப்பேதமென்கொ
டுசெப்புக - பூதங்கள் கூடுகிறவிடத்திலேபேதந்தான்வந்ததேது
கொண்டென்று சொல்லுவாயாக,-கருமத்தளவில் வருமெனில் -
கன்மத்துக்கீடாகப் பேதமுண்டாமென்று நீசொல்லில்,— பித்த
ருரையிற்றிகழு முணர்வொழிந்தனையே - நீகன்மத்துக்கீடாய்வ
ருமென்றுசொன்னது பித்தர்சொல்லுகிற சொல்லைப்போல விள
ங்காநின்றது நீயுமறிவுகெட்டு விட்டதாயிருந்தது.— கருமஞ்செ
ய்வோன் கடவுளன்று - யாதொருகருமத்தைச் செய்து வருகிறவ
னைக் கத்தாவென்று சொல்லப்படாது ஆகையா லிந்தக்கன்மஞ்
செய்தது சிவமல்ல,-உடலுமருவி நின்றிருவினைவளரா நுகராஉட
லும் ஜடமாகையாலோ ரேதுவுமின்றிக் கன்மத்தை யுண்டாக்கி
க்கொள்ளவுமாட்டாது பிராரத்தகன்மத்தைத் தானாகப் புசிக்கவு
மாட்டாது, சிவன்கூடிநின்று புசித்தாரென்னில்,—கடவுளு முட
லின்கண்படாறுஞ்சல் - வாக்குமனாதீதனாயிருக்கிற சிவன் கன்மத்
துக்கீடாக வோருடலினிடத்திலிருந்து பொருந்துதல் பிராரத்தந்

தொலைந்தவாறேயந்தவுடலைவிட்டுவிடுதல்,—இடர் நலமுறுதலிற ங்குருத லேறுதல்-இந்தவுடலோடெங்கூடிநின்று புண்ணிய பாவங்க ளைப்புசித்துக் கொண்டிருதல் சாக்கிராதியைத்தைகளிலே யிறங் கிய திதப்பட்டுக்கிடத்தல்மீண்டுமுணர்த்துமுறைமையிலேயேகிச் சாக்கிரத் தானத்திலே வருதல். — எவ்வகையேனுஞ் செய் கையின்றாலும் - இவையெல்லா மெந்தப்பிரகாரத்தாலுங் கட வுளுக் கிந்தத்தொழிலில்லாதபடியாலும். —பலகலையுலகினிலவுதா லானும் - கர்த்தா சர்வஞ்ஞனாகையாலும் பாசஞ்சடமாகையாலும் இவையிற்றைக்கற்க வேண்டுவதில்லை இந்தவிரண்டுவகைக்குமி ன்றிப்பலசாத்திரங்க ளிந்தப்பிரபஞ்சத்திலேயுண்டாய்வருதலினா லும்,—எண்ணருப்பெருகு மிரவியுமொழியக் கண்ணெனவொ ன்று காண்கையினாலும் - எண்ணிறந்தபேதமாயிருக்கிற பிரபஞ் சங்களு மிவையிற்றைவிளக்கஞ் செய்கின்ற வாதித்தனுமின்றிக்க ண்ணெனவொருமுதலேயேதிரு [illegible] கண்டுவருகையினாலும்,—பா சப்பகுதியு மீசனுமொழியப் பசுவுமுண்டென் றிசையவேண்டுமன் றே-பாசத்தினுடையவகையும் பதியினுடையவகையுமின்றிப்ப சுவினுடைய வகையுமுண்டென்று நீபொருந்தவேண்டும்.—இது வெனுவென்றை யதுவாய்ப்பிரித்துப் பொதுமையினிற்குமாயை யின்பொற்பென - இதுவென்று சுட்டப்பட்டவொருவிடயத்தை விடயந்தானுயர்ந்த வறிவானது பொதுவிலே நிற்குமென்றது மா யாமயக்கத்தினுடைய பெருமையென்றறிவாயாக,...பொற்பணி யாவும்பொன்றாந்தன்மையின், பொன்னிலேயுண்டான பணிக ளெல்லா மந்தப்பொன்போல விருந்ததன்மையைப்போல்,— நிட்கள சகளத்திருவுரு நிலையுமீசனேயெனப் பேசுவர் - நிஷ்களமாகியவு ருவமுஞ் சகளமாகியவுருவமு மிவையிரண்டுங் கர்த்தாவினுடைய சொரூபமாயிருக்குமென்று பெரியோர்கள் சொல்லுவார்கள்,—அ ன்றியுருவாயுள்ள சிவமுமுருவாயிருக்கிற பிரபஞ்சமா யிருக்குமெ ன்று நீசொல்லில்,—அனைத்துமாயையெனத்- தெளிகிலையே-பிர பஞ்சமாயையாயிருக்கையா லிந்தப்பிரபஞ்சத்திற் குபாதானமாயி

ருக்குமென்றசிடமு மாயையென்று தெளிகின்றாயில்லையே. (என
வேபிரபஞ்சத்திற் குபாதாநஞ்சிவமல்லமாயையென்பதுகருத்து)
இதன்றியும்,—ஆவதுமாகாதொழிவது மிலதெனும்பாவகமூலகா
யிதனதுபான்மை - இதாம்பகுதி இதாகாப்பகுதி இவையிரண்டு
மில்லையென்கிற பாவகமூலகாயிதனுடைய பக்ஷமாயிருக்கும். அ
ந்தமுறைமைகள் ஞானவான்களுக் கில்லையென்னில்,—கட்கொ
லை வெகுளி காமங் களவுக ளூட்படுமிவைவிட மொழியாதாரிலர்
-மதுபாநஞ்செய்கிறது கொன்றுபறிக்கிறது கோபித்துச்சொல்லு
கிறது பரதாரகமநஞ்செய்கிறது பிறது கோபித்துச் சொல்லுகிற
து பரதாரகமநஞ்செய்கிறது பிறருடையபொருளைக் களவுகொள்
ளுகிறது இப்படிப்பின்னையுஞ் சொல்லுகிற பொல்லாங்குக ளெ
ல்லாத்தையுமாகாது இவையற்றைவிட்டு விடுங்கோளென்றுசொ
ல்லாதிருப்பா ரொருவருமில்லை இப்படிக்கொத்தவையெல்லாஞ்
செய்தாலும் ஞானவான்களுக்குத்தோஷமில்லை தோஷமேறுமெ
ன்று சாத்திரஞ்சொல்லுமென்னில்,— சோமபாநஞ் சுறுபாநங்க
ளாமென மறைகளார்செவிப்பறைந்தன - சோமபாநஞ் செய்கிற
து சுறுபாநஞ்செய்கிறது இவையிரண்டுங் கொள்ளலாமென்றொ
ருத்தருமறியாமல் வேதங்களாருடைய செவியிலே சொல்லிற்று
இதன்றியும்,— மறையோன்புலைச்சியை மருவுமென்பது முறை
யோ - பிராமணன் பறைச்சிக்காசைப்பட்டவளோடே கூடுகிற
து முறைமையோ முறைமையீனமோ,—எனி லதுபுனைமொழி
யென்னில்-பிராமணன் பறைச்சியைப் பரிசிக்கலாகாதென்று
சொல்லுகிறது ஒருவரம்பு கூடிச்சொன்னதொழிந்து அவளிடத்
திலேகூடினவிடத் தின்பம்விளைந்த தில்லையோவென்று நீசொல்
லில்,—சாதிபேதநீதி நீதவறினுமேதியை யேறுவிழையா விரும்பு
ம்-பிராமணனென்றுஞ் சண்டாளனென்றும் வழங்கிவந்தசாதித்த
ன்மையை நீயிப்போது தவிர்ந்துவிட்டாயினு மெருமையை விரு
ஷபமானதுவிரும்பாது பசுவைவிரும்பும். ஆதலால் ஞானவான்
களுக்கெல்லாமா மென்கிறதத்தமாகாது,—கண்ணினதுருவு மதி

ற்கதிரொளியு நண்ணருஞ்சத்தி நாடகமெனில்- கண்ணினுடைய பிரகாசமு மதிற்கூடிநிற்கிற வாதித்தனாலுண்டாகிய காக்ஷியும் பொருந்துதற்கரிய சிவசத்தியினுடைய நாடகமாயிருக்குமென்று நீசொல்லில்,—அதற்கேதுவும் பயனு மோதவேண்டும்-அப்படிச் சிவனொரு வுருவத்தைக்கொண்டானாகில் அவனுக்கிப்படி யொரு கூற்றமுண்டென்று மதுநீக்கிக்கொள்ளுகைக்குப் படிப்பு சித்தானென்றுஞ் சொல்லவேண்டும்,...நின்மொழி விரோதமுநீயுலகியற்கையும் - விசுவாதீதனாயிருக்கிற சிவனிப்படிப் புசித்துவருவானென்று நீசொல்லுகிறசொல் விரோதமு நல்லவனின்னான் பொல்லாதவனின்னானென் றுலகிலுள்ளவர்களெல்லா மங்கீகரித்துக் கொண்டிருக்கிற முறைமையும்,—தன்மசாத்திரமுஞ்சகலருமென்செய்யும் - புண்ணியபாவங்களின்னதென்றும் பாவஞ்செய்தவர்களை ராஜாதண்டஞ்செய்யக்கடவனென்றுந் தன்மசாத்திரங்களிற்சொல்லுகிற முறைமையுமிப்படிச் சொல்லப்பட்டவையெல்லா மான்மாவொன்றில்லையாமாயி னவையெல்லா மென்னபிரயோஜனத்தைச்செய்யும். இதன்றியும்,—உலகேழெனவிறை பல்வாந்தன்மை - "உலகேழெனத்திசை பத்தெனத்தா னொருவனுமே,, என்ற திருவாசகத்தின் றன்மை,—கடமொடு சார்வங் கலசமாதிகளடலுறு குயவனாயினனென்றால் - குடங்கள் சட்டிகள்கலசங்களிவையாதியாகச் சொல்லப்பட்ட பாத்திரங்களெல்லாம் விரைவிலேபொருந்திச் செய்யப்பட்ட குயவனாயினனென்று சொன்னால்,—தானேயாகா வவைதானாகான் - அந்தக்குயவனந்தப்பாத்திரங்களாகான் அந்தப்பாத்திரங்க ளிந்தக்குயவனாகாது,—ஆயினனென்பதாக்கின னென்பதாக்கின னெனவே-ஆயினனென்னதாக்கினனென் றிலக்கணங்களிற் சூத்திரஞ்சொல்லுகையினால்...ஆனாயென்பதனைத்து மவ்வகைதானாகாமையைச் சாற்றிடுமெனக வானானாய்மண்ணானாயென்று சொல்லப்பட்டதெல்லா மந்தச்சிவனந்தவாறு மண்ணுமாகா னென்பதைச் சொல்லுமென்றறிக,—தாமேயெனு மிதந்னியேகாரம் - தாமேதானாகச்செய்யுமென்கிற

வொப்பில்லாத வேகாரத்தோடுங் கூடியிருக்கிற திருவாக்கு,— அழுந்தில ரதுவேயாய்த்திலர்-தாங்களழிந்தார்களுமில்லை யந்தச் சிவமுதலானார்களுமில்லை,— அதுவிட்டொழிந்திலர் பிரிவின்றி யுமிவையுணர்த்தும் - அந்தச்சிவமுதலையின்றிக் காரியப்பட்டா ர்களுமில்லை யந்தமுதலிற்கு வேறாயிருந்தார்களு மில்லையென்றிப் படியிருக்குமென்று சொல்லும்,—காயும் பழமுஞ் சுவையுமுகர்வா தாயவன்றானு மவன்முதற்றென்னும் - "காயாகிப் பழமாகிப் பழுத்தினின்ற விரதங்களுகர்வாலுந் தானேயாகி, என்றதிருவாக் கு காயும் பழமுமவற்றுணின்ற விரதமு மவையிற்றைப்புசிக்கிற வனு மந்தக்கத்தாவாலே யுண்டாகையா லிவையெல்லாஞ்சிவமு தலாகவுண்டான தென்றுசொல்லும்,... அகிலமுந் தெரிய வறி வோன்றானும் - பிரபஞ்சமெல்லாத்தையு மாக்கமற வறிகிறவனு ம்,...அகிலமுமறிநரை யறிவிப்போனும் - அறியும்பகுதியுள்ளவ ர்களுக் கெல்லாத்தையு மறிவிப்போனும்,—அறிநர்க்கறிவாயறி கின்றோனும் - அறியும் பகுதியுள்ளவர்களுக் கவர்களுடைய வறி வாய்நின்றறியும் பகுதியையுடையவனும்,— அறிவிற்கறி பொரு ளாவோன்றானும்-முத்தான்மாக்களுக் கறிபொருளா யிருக்கிறவ னும்....அகிலமுமேனியானவனென்னும் - பிரபஞ்சமெல்லாமவ னுக்குத் திருமேனியாகையா லிந்தமுறைமைகளை யுடையவனெ ன்று சொல்லாநிற்கும்,—தருபொருள் கொள்பொரு டருவோன் கொள்வோன் - ஒருவன்கொடுக்கப்பட்ட பொருள்தான் கொள் ளப்பட்டபொருள் ஒருவன்பொருளைக் கொடுக்கிறவன் அந்தப் பொருளை வாங்கப்பட்டவன் இவையெல்லாம்,...ஒருபொருளாயி னுவப்புண்டெங்க - ஒருபொருளாயிருக்குமாயின் மிகவும்பிரியம் வருமெங்கே: இப்படியுஞ் சொல்லுவார்களோ,— நுகர்வோன்றன க்கு நுகர்பொருள்வேண்டிற்று புசிப்பானொருவனுக் கொருபொ ருளைப் புசிக்கவேண்டினவிடத்து,... இகலறக்கிடையா திருந்த தெனினயமும் - அந்தப்பொருளிவனுக்கு மாறுபாடின்றி யெந் தபொருந்தாதிருப்பானேன், எல்லாமொருபொருளா யிவனினை

த்தபொழுது புசிக்கக்கண்டோமில்லையே ஆகையா லெல்லாமொ
ன்றாயிருக்குமாயின் நரகமுண்டாகாது. அதேனென்னில்,—வே
ண்டாராயினு மெய்யுறுவியாதிக ளுண்டாகாதொழியாது - குன்மசூ
லைமுதலானவியாதிகளை யநுபவிக்கவேண்டா மென்றவர்களிருந்
தாலுஞ் சரீரத்திலேயுண்டாயிருக்கிற வியாதிக ளிவர்களை வந்து
பொருந்தி யநுபவியாமல்விடாது, ஆகையா லெல்லா மொன்றெ
ன்றுசொன்ன தத்தமன்று. ஆன்மாவில்லை யெல்லாஞ் சிவமநுப
விக்குமென்றாய்,—இறைக்கிவை யீடல - வேண்டின பொருள்
இட்டாமலும் வேண்டாதவியாதிகள் கிட்டியும் இவையிற்றினுண்
டாகியவருத்த மான்மாவுக்கேயல்லது சிவனுக்குண்டாகாதுஇப்ப
டியிருக்கையிலே,...சத்தியுஞ் சிவமுந் தாமேநுகருமென்றித்திற
னுணர்வு வந்தெய்துவதெவர்க்கோ-ஆன்மாவில்லை சத்தி சிவங்க
ளே யெல்லாச்சுகதுக்கங்களையு மநுபவிக்குமென்று சொன்னவி
ந்தப்பகுதியி லுண்டாகிய ஞானமிந்தப்பிரபஞ்சத்திற்குள்ளே யா
ர்க்குத்தான் வந்துண்டாவது. (என்றதாக்ஷேபம்,)—தமக்கே
யென்னிற் றாமுணராமையும் - சத்திசிவங்களுக்கேயிந்தவநுபோ
கமென்னில் அந்தச்சத்திசிவங்க ளிந்தப்பிரபஞ்சத்தை யறியா
தபடியாலும்;—அமைப்பறவுணர்தலு மவர்க்கடைவன்றே- அறி
யமிடத்துச் சுட்டியறியாமற் றடையறவெல்லாத்தையு மொக்கவ
றிகையாலுஞ் சுகதுக்கங்களான்மா விற்கொழிந்துசிவசத்திகளுக்
குண்டாவதல்லவே. (இதுபெத்ததை மறுத்தது.) (மேன்முத்தி
யைமறுக்கிறார்.) நானொருமுத ல்வனொருமுதலென்கிறது குற்ற
த்தையுடைய வழியென்று மிவனவனால்விடுகிறது நல்லவழியாகிய
சாயுச்சியமென்றுஞ் சொன்னாய்,—நானுமவனு நவையு நலனும்-
நானென்கிறவான்மாவும் அவனென்கிற சிவமு நவையென்கிறகு
ற்றமு நலனென்கிறநன்மையும்,— தானவனாகையு நின்சாதனத்
தில் - இந்தவான்மா வந்தச்சிவனாகவேண்டு மென்கையும் நீயெ
ல்லாமொன்றென்கிறவனாகையாலுன்னுடைய சாதனத்திற்குட்
பட்டதல்ல. இதன்றியும், சகயோகத்தைச் சாயுச்சியமெனப் பக

ர்வது பதிபசுபாசத்தவர்க்கே - சிவனோடொன்றாய்க்கூடிப்போ
கிறதைச் சாயுச்சியமென்று சொல்லுகிறவிது சிபதார்த்த நிண்
ணயம் வந்தவர்கள் கொள்ளும்பகுதியாமே. இதன்றி,... யாதொ
ருவகையெனவோதிய திறைநூல் சொன்னவற்றொன்றன்று -இ
ந்தமுத்தித்தன்மை கூடுமெனவுஞ் சஞ்சாரத்தோடே கூடியிருக்கி
றவ னவையிற்றைவிட்டு நின்றதே நிலையாகக்கொண் டுபசரித்து
வரக்கடவனென்று நீசொன்னது சிவாகமம் மோக்ஷத்துக் கேது
வாயுள்ளவர்கள் சரிக்கவேண்டியமுறைமை பலவழியுஞ் சொல்லு
ம் அவையிற்றிலே யொருவழியுங் கூடப்பட்டதல்ல,... என்னில்
வீடெளிதே - அப்படிச்சரிக்கிறதுதானே முத்திசாதனமென்னி
ன் மோக்ஷத்தையரிதென்று சொல்லவேண்டுவதில்லை, எல்லார்க்
குமெளிதாய்ப் பெற்றுவிடலாமென்றுசொல். இதன்றியும்,...தா
னறிவழியே தலைப்பொருள்பிடித்து - ஆசாரியர் கற்பித்தவழியே
யொழுங்கில்வாராமல் தன்னுடைய போதத்திற்குத் தோன்றின
வழியே தலைபானவழியாகப்பிடித்து....மேனிகழ்பலமும் வீடளி
த்திடுமே - அந்தவழியே யொழுகிவர லதனாலுண்டாகிய பலமும்
வீட்டின்பத்தைத் தருமேல்,—நிலையாக்கருதி நிலையில்லாமைக்கு
ச்சாக்ஷியான தேகாதிபிரபஞ்சத்தை நிலை நிற்குமென்றுகருதி—
புலையாடுதலு மூலகாயிதன்பொருள் - செய்யாத காரியத்தைச் செ
ய்துகொண்டுவருகிற துலகாயிதன்கொள்ளும் பொருளாமொழிந்
து சைவர்கொள்ளும் பொருளல்ல, குட்டியன்மிறி நற்கோலமெ
ழுதுத விட்டமதாயில் - சுவரில்லாமற் சித்திரமெழுதுகிற தொரு
வருக்குங்கூடாதது உனக்கிஷ்டமா யிருக்குமாயின்,— கருவியுமி
டங்களுங் கருத்துறவுரைக்க - தனுகரண புவனபோகங்க ளான்
மாவிற்கேயென்று சாத்திரஞ்சொல்லுமிடத்து,—தெரித்திடு மிதி
த்து. அநுவயம். அதிதத்துதெரித்திடும் - சிவன்விசுவா தீதனாயி
ருக்கையினாலே யவனுக்கிவை வேண்டுவதில்லை இவையெல்லா
மான்மாவிற்கு வேண்டியிருக்கையிலே யான்மாவிற்கில்லைஇவை
யத்தரத்தே நிற்குமென் றுன்னுடையபோத மென்றுங் கூசாமணி

னைத்துச்சொல்லிடும், இதன்றியும்,—அறிவொன் றில்லோர்க்கி றையருளுதவுதல் - சற்றுமறிவில்லாத வான்மாக்களுக்குக்கத்தா வினுடைய வருளறிவைக் கொடுக்குமென்றாய் அங்ஙனமதுசெய் தல் - பிறிவறிவரியச் செறியிருளிடத்து - ஒருசற்று நீக்கங்காணும ற்செறிந்த விருளிடத்திலேயிருக்கிற,—ஓரந்தகர்காணவந்தோரெ ட்மை நீவிருங்காணவேணுமென் றுங்கெடுத்தோர்தீபங்கொடுத் தனையொக்கும் - அந்தகரைக்காணவந்த வொருவர்விளக்கை க்கொண்டுவந்து கண்டந்தவிளக்கையந்தகர்கையிலே கொடுத்தெ ன்னை நீவிருங்காணவேண்டுமென்று சொல்லவவரை யந்தகர்க ண்டாரென்கிறதற்கொக்கும் அறிவில்லாத வான்மாக்களுக்குக்க த்தா வறிவைக்கொடுக்க வந்ததென்றும் நீசொன்னது,...இச்செய ற்கிறைவன் கொச்சயனன்றே - அறிவில்லாத வான்மாவிற்குத்த ன்னுடைய வருளைக்கொண் டறிவைக்கொடுத்தா னென்கிறதுக த்தாவு மிந்தவான்மாவைப்போல வறிவில்லாதவனாகவேண்டும். இதன்றியும்,—கருவியசத்திற் றெரிவுறக்காண வேண்டுனரில்ரா ல் - கருவிகளைக்கொண்டு தேகாதிபிரபஞ்சத்தை நன்றாகக்காண் கிறகாசுவிலை சிவஞானிகளொருவரு மத்தைவேண்டி யிருப்பாரி ல்லை அப்படியிருக்கையிலே - கண்டறிவுயாவுஞ் சிவமேயென்று செப்பினை - இவ்விடத்துக் கருவிகளைக்கொண்டறியு மறிவெல் லாஞ் சிவமேயென்று நீசொன்னாய்,—அவமுறுபொறிபுல னறியா - இந்திரியங்கள் ஜடமாகையினாலே விடயங்களை யறிய மாட்டா து,...அறிவது பிரமமென்றோர்க் குன்போ லிடர்ப்படவில்லதே - எல்லாத்தையுமறிகிறது பரப்பிரமமென்றுசொன்ன மாயாவாதிக் குமுன்னைப்போலக் குற்றஞ்சொல்லத் தக்கதில்லை அதேனென் னில் அவன்பிரமத்தையறிவென்றும் பிரபஞ்சத்தை ஜடமென்று ஞ்சொன்னான். நீயெல்லாத்தையுஞ் சித்தென்றுசொல்லுகையினா லே குற்றம். இதன்றியும்,...எற்றங் கருவியிருபதோ டிரண்டும்- அந்தமாயாவாதி பதினாலுகருவியு மூன்றகத்தையுஞ் சொன்னான் நீயவனிலும்பார்க்க வெறிருபத்திரண்டு கருவியும்,...போற்றுமை

ந்தவத்தையும் புகறிரிமலமு மீசனுமுயிரும் பேசினை - ஸ்வரூப
சரித்துக்கொண்டுவருகிற ஞ்சாத்தையு மவர்களாற்சொல்லப்ப
ட்ட மூன்றுமலமுங் கர்த்தாவு மான்மாவுமுண்டென்றுசொன்னாய்
...அஃதொழிக் தொன்றேயாருமென்றநின்னியல்பு - அவையிற்
றையெல்லாம் விட்டிப்பொழுதெல்லா மந்தச்சிவமொன்றுமேயெ
ன்று நீசொல்லுகிறவியல்பு எத்தோடொக்குமென்றால்,...தாயர்ம
னைவியர் தாதியர் தவ்வையர் - தாயையுந் தன்னுடைய பெண்சா
தியையும் வெள்ளாட்டியையுந் தமக்கையையும், ஆயவரவரை
யுமோர்மையிற்காணும் - அப்படிச்சொல்லப்பட்ட வெல்லாரை
யும் விடயப்பார்வையாய்ப் பார்க்கும்,...கோகழி தூர்த்தர் கொ
டுந்தொழிறகுமே - கோவினாற்கழியுண்டு போர்த்தொழிலைக்கொ
ண்டு அவர்களைக்கண்டு தன்னெல்லையிலே நில்லாமலப்பாற் பட்
டுக்கண்டுவருகிற தூர்த்தனுடைய கொடுந்தொழிலையொக்கும்...
ஆக மற்றதன்-நீ சொல்லிவந்த ஞானத்தினது தன்மை இப்படித
வறுதக்கிடக்க,—அருணிலைதன்னிலே யேகநாயகனாகிய விறைநி
லை - அருளான்மாக்களை யுபகரித்து நிற்கிறமுறைமையான்மாவி
ற்குத் தனக்கெனவோர் சுதந்தரமில்லாமலே நிற்குமுறைமைகத்
தா சர்வத்திலுநிறைந்த நிற்குமிடத் தொன்றிலுந்தாக்கற்று நிற்கி
றமுறைமைநிலை, நாசமில்பாசம் வீசியவியல்பிலை-அழிவின்றியிரு
க்கிறபாசஞ் சர்வான்மாக்களையும் பந்தித்துநிற்கிற முறைமை,—
இனையவையொன்று நினைவினுமின்றி - இப்படிச்சொல்லப்பட்
டவையொன்று முன்னுடைய நினைவிலுங்கூடவில்லாமல்,... உ
ண்டெனுமுணர்விற் கண்டது கருதில் - ஆன்மாவிற் கறிவில்லை
அறிகிறது சிவனேயென்று நீ காட்டப்பட்டவறிவினாலே நீ யதா
சாரமாகச்சொன்னதை விசாரிக்கில்,—இழுக்கெனும் புலன்வழி
யொழுக்கமு மதுவாய்க்கொண்டு - இந்திரியவாதனை பொல்லா
தென்றுசொல்லுமிடத் தக்தவிந்திரிய வாதனையை நீயாசாரமாக
க்கொண்டு,—பண்டையி லெண்டருமடங்கு வந்தவர்செய்தந்தை
யையன்றே - பெத்தநிலையிற்செய்து வந்ததகாசாரத்திலும் பார்

க்க முந்தத்திசையி லெட்டுமெடங் காசாரஞ்செய்ய மயக்கத்தைத்தீர்த்த வஞ்ஞானத்தை வெறுக்கிறதல்லது உன்னைவெறுக்க வழிக்கில்லை,—புன்மைக ணீங்க வுண்மை கேண் மதி-இப்படிக்கொந்தவஞ்ஞான முனக்கு நீங்கத்தக்கதாக நான்சத்திய ஞானத்தைச்சொல்லுகிறேன் அதைபுத்தி பண்ணிக்கேட்பாயாக, எ-று. (மதி-அசை,) (கசு)

நிமித்தகாரணபரிணாமவாதிசங்கற்பநிராகரணமுற்றிற்று

---

## சைவவாதி சங்கற்பம்,

—()—

அறிவாயறியு மறிவுயிர்கேவலத்
தருவிலனிருளொடும் பிரிவிலனண்ணல்
கலைமுதலாக நிலவியகருவிகள்
விளக்கெனவுதவுந் துளக்கறப்பொருந்தி
யிருவினைநுகர்வில் வருவினைசெய்து
மாறிப்பிறந்து வருநெடுங்காலத்
திருண்மலபாகமுஞ் சத்திநிபாதமு
மருவுழியருளுருமன்னவணைந்து
செல்கதியாய்ந்து பல்பிணிபடுத்திக்
கருவியுமலமும் பிரிவுறப்பிரியா
ஞானநல்கலுந் தானதுநோக்கித்
தன்னையுமதனையுந் தன்முதற்பொருளையு
மின்னவென்றறியா விருவருமுயங்கி
யொன்றாயுறுபயனுவப்பு
மின்றாய்நிற்கு மிதுசிவகதியே.

(இ-ள்) அறிவாயறிவு மறிவுயிர் - அகாதியே சகலத்திலறிவாயறிந்து கொண்டுவருகிற வறிவாயிருக்குமான்மா,— கேவலத்

தறிவில் னிருளொடும் பிரிவிலன் - கேவலாவத்தையிலே யொன் றையுமறியான் அறிவில்லாம லவ்விடத் தாணவமலத்தையும் விட்டுநீங்கான்,—அண்ணல் கலைமுதலாக நிலவிய கருவிகள் விளக்கெனவுதவும் - இப்படிக்கேவலப் பட்டுக்கிடக்கிறவவதாரத்திலே யான்மாவிற்குக் கர்த்தாவானவர் கலைமுதலான தத்துவங்களைக்கண்ணுக்குக் காட்டான விளக்கினது தன்மைபோலக் காட்டாகக்கூட்டுவன்,...துளக்கறப்பொருந்தி யிருவினைநுகர்வில் வருவினைசெய்து - அந்தக்கருவிகளோடு மனைசவறக்கூடிப் பிராரத்தகன்மமான புண்ணியபாவங்களைப்புசித்துவருமிடத் தாகாமியத்தை யார்ஜித்துக் கொள்ளும்.—மாறிப்பிறந்துமரு நெடுங்காலத்து-இந்தக்கன்மத்துக்கீடாக நெடுங்காலமச்சுமாறிப்பிறந்துவருமிடத்துச் சிவபுண்ணிய முண்டாய்,அதனாலே,—இருண்மலபாகமுஞ் சத்திநிபாதமுமருவுழி - மலபரிபாகமுஞ் சத்திநிபாதமும்பொருந்தினவிடத்து,(இதுபெத்தம்.)(மேன்முத்தி.)—அருளுருமன்னவனணைந்து - அருளேதிருமேனியாகிய கர்த்தாவாசாரியமூர்த்தமாகவந்து,—செல்கதியாய்ந்து பல்பணிபடுத்தி - இவன்பொருந்தப்பட்டமோக்ஷத்திற்கேதுவையாராய்ந்து பலபணியாகியசரிதைகிரியாயோகங்களிலே நிறுத்தி — கருவியுமலமும்பிரிவுறப் பிரியாஞானநல்கலும் - அந்தச் சரிதைகிரியாயோகங்களை முற்றச்செய்கையினாலே கேவலசகல மிரண்டையுநீக்கி யநாதியே யிவனையுபகரித்துக்கொண்டு வருகிறவுண்மை ஞானத்தைக்கொடுப்பன். அப்படிச்செய்த மாத்திரத்தினாலே.—தானதுநோக்கித் தன்னையுமதனை தன்முதற்பொருளையும் - இந்தவான்மா வுண்மை ஞானத்தைத்தெரிசித்து ஞானுருவாகியதன்னையும் ஞானமாகிய வுண்மைஞானத்தையும் பந்தஞானத்திற்கு முதலாயுள்ளஞேயத்தையுமித்தமூன்றுமுதலையும்,—இன்னவென்றறியா விருவருமுயங்கி - அவ்விடத்திற் கட்டியறியாமலிந்தவான்மாவுஞ் சிவமுந்தம்மிலே கூடி,—ஒன்றா யுறுபய னுவப்புமின்றாய் நிற்றும் தனிவகதியே - இரண்டொருமுதலாகி யவ்விடத்தூற்ற தொருபயனும் பிரியமு

மிரண்டு மில்லையாயிருக்கிற வவதரத்தைச் சிவசாயுச்சிய மென்று சொல்லப்படுவது. எ-று, (கள)

சைவவாதி சங்கற்ப-முற்றிற்று.

—()—

## சைவவாதி சங்கற்ப நிராகரணம்.

இதுகதியாக முதலறிவுயிரேற்
பொறிபுலனீங்க வறிவுயிரன்றே
யடைகாயநாறி னிடைசேர்சிவப்பென
விந்தியத்தொகையின் வந்தறிவொன்றுமின்
றின்றுமென்ற லன்றேயெந்தை
யறிவிலனதீதச் செறிவிலென்றுரைத்த
நின்மொழிவிரோதமும் பின்முன் மலவு
மன்வயினிகழா மலமிருணிறையொளி
யான்மாவிளக்கிற் றருமருட்கலாதிக
ளீனமிலிவனிடத் தெவ்வாறிசைந்தன
விசைந்ததாயினு மிசையாதாயினு
மசைத்திடுமுத்தி சாதநமவமே
சத்திநிபாதமோ தருமலபாகமோ
வுய்த்தகாரண காரியமோதுக
பாகங்காரணமாகின்மற்றது
காலாவதியிற்காயாவதியின்
மேலாமென்னும் வினையுறுமவதியிற்
றுயரெனவுயிர்க்குத் தோன்றிடுமவதியி
னயமிகுமிறைவ னல்கிடுமவதியி
லேதிற்கூடு மோதுகவிருவினை
யொத்தவெல்லையில் வைத்தனரென்னி
லருவினையாக்க வருவினைநில்லா

வொருவினைபுரிகா விருவினையாகா
வொப்புறுமாறு செப்புகதேசிக
னருளுருவென்ற பொருளினையாயின்
மாயாவுருவன் மாயாவுருவினை
யேயானேய்ந்தவ ரெம்மனோரே
பல்பணிஞான் காரணமென்னிற்
றொல்பணிதொறும்பயன் றொடுப்பதனாலு
மொருபணிசெய்யாச் சிரபுரச்சிறுவரு
மரசராய தருணைத்தலைவரு
முதிர்பர சமயத்திதழுறுமரசரு
ஞானம்பெற்ற தன்மையினாலு
மீனமில்பணியருட் கேதுவென்றென்றூன்
ஞானேற்பத்தி நிமித்தமித்தொழிலென
வேனோர்கிறைநூ லியம்பிற்றென்றுங்
கருவியுமலமும் பிரிவுறவருடரு
மென்றனைகேவலத் தேதுமறிவிலன்
றன்றியசகலத் தருணிலைதோன்று
மவ்வவத்தையி லிறையருள்பெறுகுவம்
செவ்வியஞான தரிசனமாவது
நால்வகைமாயைப் பால்வருஞானம்
பண்டைஞான மிதுவறிதாவாக்
கண்டஞான மிதுவரக்காணி
லினஞானிக ளென்போர்யாருமின்
ஞானவேற்றுமை நாடலுமரிதே
தானுஞானமுந் தலைவனுமென்றனை
யானபினிவனு மிவனதுஞானமும்
பாசமும்பாச ஞானமுமென்றிவை
பேசவொரன்றுப் பேற்றியவாகலின்
மும்மைப்பொருட்கு மும்மைத்தன்மை

செம்மைத்தென்னிற் செலவுகளெழுதக
விருவருங்கூடி யொருபயனுய்த்தென்
றருளிணையிவர் றபேதிகணிலையே
பதிபசுபாச முதிரறிவுகளுட
ஞுமுன்னர்க் கூறுப்பின்ன
ரிருபொருணீத்துமற் றொருநால்வகையு
மீனமில்ஞாதுரு ஞானஞேயமென்
றிசையமூன்றாய்ப் பசுபதியென்றவற்
றிரண்டாயிரண்டு மொன்றிறென்றாகத்
திரண்டாம்பயனெனும் திருவுருவெளியிற்
சென்றுசென்றணுவாய்த் தேய்ந்துதேய்ந்தொன்றா
மென்றிறையியற்கை யியம்புதற்குமே
யொன்றுமென்ற லன்றியுமுவப்பு
மின்றுமென்ற லென்பயனியம்புக
வென்றனைவினவு மியாவும்விளங்க
வென்றிகொள்கருத்தின் விரும்பினையாயி
னதிக்கரையானெனக் கோதித்தலமாந்து
வெண்ணெயம்பதிதிகழ் மெய்கண்டவனரு
ளுண்ணிலையுடையோ னொருவனுரைத்த
தவப்பிரகாசத் தன்மையில்விரித்த
சிவப்பிரகாசச் செழுந்தமிழுண்மையை
யருளுடனாய்ந்து கொள்ளத்
திருவருள்வினவ றிருந்திடுமென்றே,

(இ-ள்.) இதுகதியாக முதலறிவுயிரேல் - நீயிப்பொழுது சொல்லிமுடிந்தவிது முத்தியாகட்டும் அதுபின்பு சொல்லுகிறோம் ஆன்மாவநாதியிலே யறிவாயிருக்குமாயின்,...பொறிபுலனீங்க வறிவுயிரன்றே > இந்திரியங்களு மதனலறியப்பட்ட விடயங்களு நீங்கினவிடத் தான்மாவிற்கறியும் பகுதியுண்டாமோ அவ்வி

ந்திரியங்கள் கூடினபொழுதறிந்து மலைநீங்கினபொழு தறியா மையுமாயிருப்ப தான்மாவிற்குள்ள சுபாவமென்று நீ-சொல்லில்,—அடை காய் நூறினிடைசேர் சிவப்பென பாக்கு வெற்றிலை சுண்ணாம்பு கூடிமத்தித்தவிடத்திலே யவையிற்றினது தன்மையின்றி நடுவேயொரு சிவப்பெழுந்தாற்போல,— இந்தியத் தொகையின்வந் தறிவொன்று நின்றின்றுமென்ற லன்றே யெந்தை- இந்திரியங்களினுடைய கூட்டத்தினடுவே யோரறிவுதோன்றியுடனேயழியுமென்று சுணபங்கஞ்சொல்லுகிற புத்தனாமே யப்பா நீ ரிதன்றியும்,—அறிவில னீதச்செறிவிலென்றுரைத்த - அறிவாயறிந்துவருகிறவான்மாவிற்கு மலத்திறலே நெருங்கியிருக்கிற வதீதத்தானத்திலறிவில்லையென்றுசொன்ன,—நின் மொழிவிரோதமும் பின்முன்மலைவு மன்வயி னிகழா - உன்னுடைய சொல்விரோதமுமொருக்காலறிவில்லையென்று மொருக்காலறிவென்று நீ முன்னேபின்மலையச்சொன்ன விவையு நிலைபெற்ற நல்லோர்களுடைய கூட்டத்தினிடத்துச் சொல்லிக்கொள்ளப்படாது. இதன்றியும்,— மல மிருள் - ஆணவமலமோவென்றும் சுத்தவிருளாயிருப்பதொன்று,... இறையொளி - கர்த்தாதானே வென்னின் மகாபிரகாசமாயிருப்பானொருத்தன்,...ஆன்மா விளக்கிற்றருமருட்கலாதிகள்-ஆன்மாவிற்குத்தான் விளக்கைபோலே காட்டாயுள்ள கலைமுதலானதத்துவங்களு மாயாகாரியமாயிருக்கையினலேமயக்கமாயிருப்பதொன்று. ஆகையாலந்தக்கருவிகள் - ஈனமில்வணிடத்தெவ்வாரிசைந்தன-இருளாயிருக்கிறகேவலத்தானத்திலேயறிவின்றியிருக்கிற வான்மாவிற்கு மகாபிரகாசமாயிருக்கிற கருவிகள் சென்றுபொருந்தினபடியெப்படி,...இசைந்தாயினு மிசையாதாயினும்-அந்தக்கருவிகள் கூடியறிந்தாலும் அந்தக்கருவிகள் கூடாமற்கேவலத்திலே கிடந்தாலும்போகட்டும்,...அசைந்திடு முத்திசாதகமே நீநிலைநிற்கமாட்டாமல் முத்திசாதகஞ்சொன்னது மிகவுநன்றாயிருந்ததில்லை. (இதுபெத்தத்தைமறுத்தது.) (மேன்மு[illegible]மறுக்கிறார்,)... சத்திநிபாதமோ தருமலபாகமோவுய்த்த

காரணகாரிய மோதுக-முன்னேயிருண்மலபாகமுஞ் சத்திநிபாத மும ருவழியென்றாய் அதிற்சத்திநிபாதங்காரணமாக மலபரிபாக முண்டாயினதோ மலபரிபாகங்காரணமாகச் சத்திநிபாதமுண் டாயினதோ இவையிற்றிற்செலுத்தப்பட்டகாரணகாரியமியாதெ ன்றுசொல்லுவாயாக,... பாகங்காரணமாகின் - மலபாகங்கார ணமாகச் சத்திநிபாதமுண்டாயிற்றென்னின்,...மற்றது காலாவ தியிற் காயாவதியின்-அந்தமலபாகமென்றுசொன்னது எண்ணி றந்த சரீரமெடுத்துப்போட்டு வருகிறதற்குள்ளே யின்னசரீரத்தி லே முத்தியென்றிருக்குமோ வந்தச்சரீரத்தினுடைய வெல்லையி லே யெண்ணிறந்த காலஞ்செல்லுகையிலே யதிலே யின்னகால த்திலே யிவனுக்கு முத்தியென்றிருக்குமோ,மேலாமென்னும் வி னையுறுமவதியில்-அந்தக்காலத்தினெல்லையிலே யொன்றுக்கொன் றுமேலாகவருகிற புண்ணியபாவங்களிரண்டுந்துலையொப்புவந்த வெல்லையிலேயோ,... துடரொணவுயிர்க்குத் தோன்றிடு மவதியில் - எண்ணிறந்தகாலம் பிறந்திறந்துவருகிற வான்மாவிற்கு ஜாகத்து க்கமென்று தோன்றின வெல்லையிலேயோ,...கயமிகுமிறைவனல் கிடு மவதியிலேதிற்கூடு மோதுக-ஆன்மாக்கள்பேரிலே மிகவும் பிரியத்தையுடைய கர்த்தா அவனை யின்னவவதாரத்திலே யிரக்ஷி ப்பனென்றுண்டே யந்தவெல்லையோ இவையிற்று லெந்தவவதா த்திலே கூடுமென்று சொல்லுவீராக,.. இருவினையொத்த வெல் லையில்வைத்தனரென்னில் - புண்ணியபாவ மிரண்டுந்துலை யொ த்தவவதாரத்தில் மலபாகமுண்டாமென்று பெரியோர்கள் சொல் லுவார்களென்று நீசொல்லில்,...அருவினை தூக்க வருவினை யில் லா - கன்மமருவாயிருக்கையினாலே புண்ணியமொரு தட்டிலும் பாவமொரு தட்டிலும்போட் டிரண்டுமொத்ததோவென்று தூ க்கிப்பார்க்கைக்கு உருவாகக்காணப்படாது, இதன்றியும்,... ஒரு வினைபுரிகா லொருவினையாகா - ஒருபுண்ணியத்தைச் செய்துவிட் டுப் பாவம்பாதியாகப் பகுத்ததில்லாது ஒருபாவத்தைச்செய்துவி டத்துப் புண்ணியம்பாதியாகப் பகுத்து இல்லாது புண்ணியம்பு

ண்ணியமாகவும் பாவம் பாவமாகவும்வரும்,—ஒப்புறமாறுசெப்பு
க - புண்ணியம் பாவமிரண்டுந் துலையொக்கிறபடி யெப்படியெ
ன்று நீர்சொல்லவேண்டும். இதன்றியும்,... தேசிகனருளுருவென்
றபொருளினையாயின்-ஆசாரியனுடைய வடிவு அருள்வடிவாயிரு
க்குமென்று நீசொன்னதனுடைய வத்தத்தை விசாரிக்குமிடத்து
...மாயாவுருவன் மாயாவுருவினையேயான - அழியாத் திருமேனி
யினையுடைய கத்தா வழிந்துபோகிற மாயாசரீரத்தைப் பொருந்
தான். அப்படியன்றுகாணும் ஆன்மாக்களை யிரக்ஷிக்கைப் பொ
ருட்டாகப் பொருந்துவனென்று சொல்லில்,— எய்ந்தவ ரெம்ம
னோரே-யாதொருத்தர் மாயாசரீரத்தைப் பொருந்தினவர்களெ
ம்மைப்போல வான்மவர்க்கத்திலே யொருத்தர், அதனையொ
ழிந்து வேறொன்றாகச்சொல்லப்படாது. இதன்றியும்,—பல்பணி
ஞானகாரணமென்னில் - பல்பணியாகச்சொல்லப்பட்ட சரிதை
கிரியாயோகங்களைச் செய்வதுகாரணமாக ஞானமுண்டாமென்னி
ல்,—தொல்பணிதொறும் பயன்றெரிப்பதனாலும் - பழையதாக
ச்சொல்லப்பட்டுவருகிற சரிதைகிரியா யோகங்களைச்செய்வதுகா
ரணமாகச் சாலோகசாமீப சாரூபங்களுண்டாயநுபவித்துப்போ
மென்பது திருவாக்குச்சொல்லி யிருக்கையினாலும்,— ஒருபணி
செய்யாச் சிரபுரச்சிறுவரும் - ஒருதொழிலுஞ் செய்யாத சீகாழித்
தலைவராய் திருஞானசம்பந்தரும்,—அரசராய தருணத்தலைவரும்
இராஜகுமாரராகிய வாலிபத்திற்கெல்லாந் தலைவராகிய சுந்தர
ப்பெருமானாயனாரும்,—முதிர்பரசமயத் திதமுறுமரசரும் - மிக்
கவமணசமயத்திலேநின் றவையிற்றைச் சமயமல்லவென்றுசைவ
சயமேசயமென்றறுதி யிட்டுவந்த திருநாவுக்கரையரும்,— ஞான
ம்பெற்ற நன்மையினாலு மீனமில்பணியருட்கேதுவன்று - குற்ற
மற்றிருக்கிற சரிதை கிரியாயோகங்களென்னுந்தொழில்களைச்செ
ய்யாமல் ஞானத்திற்குக்காரணம் பதியேயல்ல தலைவ காரணமெ
ன்றுசொல்லப்படாது,-என்றால்? அல்லவென்று சொல்லி யிருக்
கையிலே நீயுன்னதென்று சொல்வதென் ஞானோற்பத்தி நிமித்த

மித்தோலென-ஞானவுற்பத்தி நிமித்தமித் தொழிலென்று,— ஏன்னோர்க்கிறை நூலியம்பிற்றென்னும் - உன்னையொழிந் துள்ளோரெல்லார்க்குங்கத்தா நூல்களிலே யருளிச்செய்து வைத்திருக்க ஞானத்தைப்பெறுதற்கு [illegible]த்தமன்றி ஞானங் கொடுப்பதற்குச் சரிதைமுதலாகியது நீகாரணமென்ற தென்னமாய்முடியும். (என்னையே ஞானம்பெறு நிமித்தந் தமாமென்பது கருத்து.) இதன்றியும்,...கருவியுமலமும் பிரிவுற வருடருமென்றனை - அறிவாகியகருவியு மறியாமையாகிய மலமுநீங்கத்தக்கதாக வருட்பிரகாசமுண்டாமென்று நீசொன்னாய்,...கேவலத்தேதுமறிவிலன்-கேவலத்தையிலே யான்மாவொன்று மறியாமற்கிடக்கையினலவ்விடத்தருட் பிரகாசமுண்டாகாது,—துன்றியசகலத் தருணிலேதோன்று - கருவிகளொருங்கியிருக்கிற சகலாவத்தையிலு மருட்பிரகாசமுண்டாகாது,—எவ்வவத்தையி லிறையருள்பெறுகுவம் - முன்சொன்னவிரண்டவ தரத்திலுமருட்பிரகாச முண்டாகாதென்றுற்பின்னைந்த வவதரந்திலேதான் கத்தாவினுடைய திருவருளைப் பெறுவோம்,—செவ்விய ஞானதரிசநமாவது - மயக்கமற நீதரித்த ஞானமாவது,— நால்வகைமாயைப்பால் வருஞானம் - தனுகரணபுவன போகமென்கிற நால்வகையோடுங் கூடியிருக்கிறமாயையின் பகுதியிலே நின்றறிந்துவருகிற ஞானமெப்பொழுது முள்ள ஞானமாகவேண்டும்,— பண்டைஞான மிதுவறிதாவரக்கண்டஞான மிதுவாக்காணில் - இந்தமாயையினலே யறிந்துவருகிறஞான மெப்பொழுதுமுள்ளஞானம் இதுநீங்கத்தக்க தாகவே வருகிறஞானம் இந்தத்தனுகரணபுவன போகங்களாகக்காணப்படின், ஈனஞானிக ளென்போர் யாருமில் -அஞ்ஞானிகளென்று சொல்லத்தக்கதாக வொருத்தருமில்லை நீசொன்னவசநத்தினலே யெல்லாரு ஞானவான்களாகவேண்டும்,...ஞானவேற்றுமை காட்டுமரிதே - ஞானத்தினுடைய வேறுபாடறியும் பொழுதரிதாயிருக்கும். இதன் [illegible]யும்—தானுஞானமுந் தலைவனுமென்றனை-ஆன்மாவுஞ் சிவஞானமுஞ் சிவமுமென்று மூன்றாகச்சொன்னாய்—ஆ

னபினிவனு மிவனதுஞானமும் - சிவனுஞ் சிவனுடையஞானமு மென்கையினுலே ஆன்மாவு மான்மாவினுடைய ஞானமும்.— பாசமும் பாசஞானமுமென் றிவைபேசுவர் - பாசமும் பாசத்தி னுடைய ஞானமுமென் றிந்தமூன்று முதலிற்கு மூன்றுஞானமு ண்டென்று பெரியோர்கள் சொல்லுவார்கள்.—ஒன்றாய்ப்பெற்றிய வாகலின் - இதுஒன்றாகாத முறைமையினுலே. - மும்மைபொ ருட்டும்மைத்தன்மை செம்மைத்தென்னிற் செலவுகளெழுதுக இந்தமூன்றுமுதலிற்கு மூன்றுஞானமுள்ள தென்கையா லான் மாவொன்றாமிடத் தந்தப்பசுஞானமும் பாசஞானமும்போனபடி யெப்படியென்று சொல்லவேண்டும், இதன்றியும்... இருவருங் கூடி யொருபயனுய்த் தென்றருளினை-ஆன்மாவுஞ் சிவனுங்கூடி யொருமுதலாயிற் றென்றுசொன்னாய்,— இவ்வாற பேதிகணில் லே - இப்படிப்பெத்தத்தி லிரண்டாய் முத்தியிலொன்றாயிருக்கு மென்றுசொல்லுகிறது மாயாவாதியுடைய மதமாயிருக்கும்,...பதி பசுபாச முதாறிவுகளுடனுரு முன்னாக்கூறு - பதிபசு பாசங்க ளுமவையிற்றினுடைய ஞானங்களு மாறுவகையாக முன் சொல் லி,—பின்னரிருபொருணீத்து மற்றொருநால்வகையும்- அந்தவா றினும் பாசமும் பாசஞானமென்ற விரண்டையும்விட்டுப் பின்பு காலாக்கி யந்நால்வகையும்,—ஈனமில் ஞாதுருஞான ஞேயமென் றிசையமூன்றாய் - இதிலேபசுஞானமொன்றையும்விட்டுக் குற்ற மில்லாத ஞாதுருஞான ஞேயமென்று பொருந்தப்பட்டமூன்றாய் —பசுபதியென் றவற்றிரண்டாய் - அதிலே ஜீவஞானத்தை நீக் கியான்மாவென்றுஞ் சிவமென்று மிரண்டாய்,...இரண்டுமொன் றெனென்றாகத் திரண்டாம்பயனெனுந் திருவருடெளியில் - இந்த விரண்டிலே யான்மாவானதந்தச் சிவனிடத்திலேகூடி யிரண்டு மொருபயனுய் நிற்குமென்று நீசொல்லும் நிர்மலசாக்கிராதீததிரு வருட்பகுதியைச் சொல்லுமிடத்து,— சென்று ஞேயின் றணுவாய்த் தேய்ந்து தேய்த்தொன்றாமென் றிலையயற்கையிய்...த றகும்-இ துவச்சத்தில் "இன்றெனக்கருளி,, என்றதிருவிருத்தத்தில் திரு

வாதவூர்நாயனார் பேரின்பம்வேண்டிக் கர்த்தாவினுடையதன்மை யையருளிச்செய்தது நீர்சொன்னவத்தத்திற்குத் தகும். (என்றது என்னத்தகாதென்பது கருத்து.) (ஒன்றுமல்லவிரண்டுமெல்லவொன்றுமிரண்டு மின்றுமல்ல வென்பதுண்மை.) இதன்றியும், ஒன்றுமென்றலன்றியு முவப்பமின்றுமென்று லென்பட - பதியும்பசுவுமொன்றுமென்று சொன்னதன்றியு மிவவிடத்தோரின்பமுமதனு லுண்டாகிய பிரியமுமின்றாதலினு லுனக்குப் பிரயோசனமென்ன (என்னவே பெறுவானில்லையென்பது கருத்து.)—இயம்புக - நான்சொன்னைத்தை யல்லவென்று சொன்னீரேயின் இனியித்தச் சித்தாந்தவத்த மிப்படியிருப்பதெனறு நீர்சொல்லுவீராக,—என்றனே வினுவுமியாவும்விளங்க வென்றிகெ சருத்தின்விரும்பினேயாயின் - பின்னேயெப்படி யிருப்பதென்று என்னே நீகேழ்க்கிறதாக வுன்னுடைய திடமுறுகருத்திலே விருப்பமுண்டாயின்.—நதிக்கரையானெனக் கொதித்தலமாந்து - ஆற்றங்கரைப்பசுப்போல் அங்காமோ விங்காமோவென்று நீபதறிக்கொண்டுதிரிகிறதெல்லாந் தெரியத்தக்கதைவிட்டு வெண்ணெய்ம்பதிதிகழ்மெய் கண்டவனரு ளுண்ணிலையுடையோ னெருவனுரைத்த - இருவெண்ணெய் நல்லூரிலேவிளங்கப்பட்ட மெய்கண்டதேவனுடைய வநுக்கிரகத்தி ]ண்மையைப் பெற்றமறைஞானசம்பந்தநாயனார் எனக்கருளிச்செய்த வத்தத்தைக்கொண்டு,— தவப்பிரகாசத்தன்மையில் விரித்த சிவப்பிரகாசச் செழுந்தமிழுண்மையை - முன்ஜநநத்திலே செய்ததவங்களினது மிகுதிகொ டுகொண்செய்யப்பட்ட சிவப்பிரகாசமாகிய செ(

யவத்தத்தை அருளுடனுய்த்து கொள்ள - ஆ டியாராய் ந்துகொள்ளவே,—திருவருள்வினவ திரு

மூலமும்-உரையும்.

பின்னையிந்தத் திருவருளின்பகுதி யெப்படியிருப்பதென்றுக் கேட்ட சந்தேகங்களெல்லா நன்றாயுமக்கு விளங்காநிற்கும். எ-று.

சைவவாதி சங்கற்பநிராகரண-முற்றிற்று.

சங்கற்பநிராகரணமூலமும் - உரையும் - முற்றிற்று.

பாயிரமுட்பட அகவல் - ௨௰.

திருச்சிற்றம்பலம்.

—()—

## தனியன்;

---

கற்றவன்கருணை கூரக் கலந்துயிர்சிவமாய்வாழப்